# கல்கி

KALKI 20.11.88 ரூ. 2.00



## தேர்தல் சாணக்கியங்கள்



8 — இல் வாக்குரிமை — இளைஞர்கள் கலந்துரையாடல்

"மீனு... நிலவூறும் உனதழகுக்கு
உலகையே தருவேனே!"

# பிறந்த நாள் இன்று... அரும்பெரும் பரிசு ஒன்றை மீனுவுக்கு அளித்துவிட்டது ஃபேர் அண்ட் லவ்லி.

இந்த நாளுக்காகவே மீனா அரு முயற்சி எடுத்திருக்கிறாள். இரு மாத முன்னேற்பாடுகள் — அதில் முக்கியமானது ஃபேர் அண்ட் லவ்லி ஒத்துழைத்த மகிமை. அவள் மேனிமீது வெண்ணிலவைப் பொழிந்துள்ளது இதமாக, இயல்பாக. பரிசுப் பெட்டகத்தை அவளிடம் நீட்டும் ரவி, பால்நிலா முகத்தழகை பருகுகிறான் சக்கரவாகப் பறவை போல். அதை வாங்கும் மீனாவின் இதயம் பாடுகிறது நன்றிக் கீதம் — ஃபேர் அண்ட் லவ்லி க்ரீமுக்கு!

மீனாவைப் போலவே நீங்களும், கவனிக்கத் தக்க சிகப்பழகை அடைந்திட முடியும் ஃபேர் அண்ட் லவ்லி துணையோடு.

**ஒரு முக்கிய விஞ்ஞானக் கண்டுபிடிப்பு...**

ஃபேர் அண்ட் லவ்லி, இயல்பாக உங்களை சிகப்பழகியாக்க இதிலுள்ள ஒப்பற்ற ஃபார்முலா — இரு முக்கிய வழிகளில் வேலை செய்கிறது. ஒன்று: சருமத்தின் அடியாழத்தில் செயல்பட்டு, உடல்



ஃபேர் அண்ட் லவ்லி துவங்குமுன்



ஃபேர் அண்ட் லவ்லி உபயோகிக்கும் நாட்களில்



கறுக்கும் உள்வினையைத் தடுக்கிறது — வேறெந்த க்ரீமுக்கும் இது இயலாத சாதனை.

மற்றொன்று: இதிலுள்ள இரட்டை ஸன்ஸ்க்ரீன் ஆற்றல், உடல்கறுக்க வைக்கும் சூரிய ஒளியை உட்புகாதபடி தடுத்து நிறம் காத்திடுகிறது. ஆகவே 6 முதல் 8 வாரங்களில் புதிதாக மேலெழும்பும் கொழுந்துச் சருமப் படலங்களில் செவ்வையான சாயல் மிளிரும். அன்றாடம் இருமுறை ஃபேர் அண்ட் லவ்லி — நாள் தவறாமல் உபயோகித்து வந்தால், மென்மை கொஞ்சும் இயல்பான சிகப்பழகு உறுதியாக உமதாகி விடும்.

**உபயோக முறை:**

கழுவிக் கொண்ட முகம், கழுத்து, கரங்கள் மீது ஃபேர் அண்ட் லவ்லி க்ரீமை பொட்டுப் பொட்டாக இட்ட பின், மேல் நோக்கித் தேய்க்க வேண்டும் மெதுவாக. ஃபேர் அண்ட் லவ்லி, செயல்படத் துவங்கும் போது சற்றே கூசும் உணர்வு ஏற்படுமானால் கவலை வேண்டாம், விரைவில் அது மறைந்துவிடும்.

**எளிதில் உள் உறிஞ்சப்படும்**

குழைவு குணமோங்கி முன்னிலும் மென்மையாக வருகிறது ஃபேர் அண்ட் லவ்லி, ஒரே சீராகப் பரவுகிறது சருமத்தில் மேலும் எளிதில் உறிஞ்சப் படுகிறது.

உடலார உணருவீர் இம் மாறுதலை...பிறகு காண்பீர் கண்ணார.

ஃபேர் அண்ட் லவ்லி பற்றி மேலும் கேட்டறிய விரும்பினீரானால் எழுதுங்கள் இம் முகவரிக்கு:
திருமதி கவிதா குமார், ஃபேர் அண்ட் லவ்லி ஆட்வைசர், பி.ஓ. பாக்ஸ் 758, பம்பாய்-400 021.

ஃபேர் அண்ட் லவ்லி
சிகப்பழகு க்ரீம்




**கண்காணும் சிகப்பழகை உமதாக்கும்... இயற்கைக்கே உரிய இதமான வழியில்**



# 'காலத்தை வென்றவன்' காத்திருந்த கதை

**எம்.ஜி.ஆர். நடித்த பல்வேறு படங்களில் இடம் பெற்ற காட்சிகளையும், எம்.ஜி.ஆர். இடம் பெற்ற பல்வேறு நிகழ்ச்சிகளையும் தொகுத்துத் தயாரிக்கப்பட்ட 'காலத்தை வென்றவன்' என்னும் தமிழ்த் திரைப்படம் விரைவில் வெளியாகவிருக்கிறது. இதனை இயக்கியிருக்கும் டைரக்டர் மோகன் காந்தி ராமன் சொல்கிறார்:**

'நீரோட்டம்' என்ற எனது படத்தில் ஹீரோவும், ஹீரோயினும், டீ.வி.யில் எம்.ஜி.ஆர்., லதா நடித்த 'மீனவ நண்பன்' படத்தின் பாடல் காட்சி ஒன்றைப் பார்ப்பது போல் ஒரு காட்சி அமைத்திருந்தேன். படத்தின் வேறு எந்த காட்சியையும் விட, எம்.ஜி. ஆரின் பாடல் காட்சி ரசிகர்களிடையே அதிக வரவேற்பு பெற்றதைத் தியேட்டரில் கண்டேன். 'ஒரு பாடல் காட்சியே, இத்தனை வரவேற்பைப் பெறுகிறது என்றால், எம்.ஜி.ஆரின் சூப்பர் ஹிட் பாடல்கள், சண்டைகள் இவற்றைத் தொகுத்து ஒரு படம் வெளியிட்டால், அது இன்னும் எத்தனை மகத்தான வரவேற்பைப் பெறும் என்று யோசித்தேன். அவரது சாதனைகளை வெளிப்படுத்தும் வகையில் அவர் நடித்த படக் காட்சிகளையும் கலந்து கொண்ட நிகழ்ச்சிகளின் திரைப்படப் பதிவுகளையும் தொகுத்து ஒரு படம் உருவாக்க முடிவு செய்தேன்.

படத்தில் இன்னின்ன காட்சிகள் இடம் பெற வேண்டும் என்று பட்டியல் போட்டுக் கொண்டு, பின் யார் யாரிடம் எம். ஜி. ஆருடைய படத்தின் உரிமைகள் இருக்கின்றன என அறிந்து, அந்த படங்களிலிருந்து காட்சிகளைப் பெறும் முயற்சியில் ஈடுபட்டேன். காட்சிகளுக்கேற்பப் பணம் கொடுத்து, வாங்கினேன். சிலர் இலவசமாகவே அனுமதி எழுதிக் கொடுத்தனர்.

**ம**துரையில் உலகத் தமிழ் மாநாடு நடந்த சமயம், என் படத்தின் தொகுப்புப் பணிகள் ஓரளவு முடிந்து விட்ட நிலையில், செய்தித்தாளில் ஒரு முழுப் பக்க விளம்பரம் கொடுத்தேன்: அதிலே 'மக்கள் திலகம், மாண்புமிகு எம்.ஜி.ஆர். அவர்களின் புகழுக்குப் புகழ் சேர்க்கும் புறநானூறு' என்று இப் படத்தைக் குறிப்பிட்டேன். எம்.ஜி.ஆரைச் சந்தித்து, படத்தைப் போட்டுக் காட்டி, அவர் அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்ளவும் விரும்பினேன். ஒரு நண்பரின் ஏற்பாட்டில் அவரைச் சந்திக்க மதுரை சென்றேன். ஆனால் எதிர்பார்த்த சந்திப்பு நிகழவில்லை.

இதற்கிடையே சென்னையில் சற்றும் எதிர்பாராத சில சம்பவங்கள் நிகழ்ந்தன. எம்.ஜி.ஆரின் மானேஜர் என்று கூறிக் கொண்டு, எஸ்.கே.டி. சாமி என்பவர், மத்திய குற்றப் பிரிவில், என் மீது மோசடிப் புகார் மனு ஒன்றைக் கொடுத்தார். அதிலே, "1.1.81 தேதிய தினத்தந்தியில் திரு. மோகன் காந்தி ராமன், 'காலத்தை வென்றவன்' என்ற பெயரில் சினிமாப் படம் தயாரித்திருப்பது போலவும், அது விரைவில் வெளியிடப் படவிருப்பது போலவும் விளம்பரப்படுத்தப்பட்டுள்ளது. இது சினிமாவில் தற்போது நடிக்காத திரு. எம்.ஜி.ஆர். நடித்த சினிமாப் படம் போன்ற தவறான கருத்தை மக்களிடையே ஏற்படுத்தியுள்ளது. மேலும் சம்பந்தப்பட்ட தயாரிப்பாளர்களின் அனுமதி பெறாமலேயே, எம்.ஜி.ஆர். சம்பந்தப்பட்ட காட்சிகளைத் தமது படத்தில் பயன்படுத்


காத்திருந்தவர்... மோகன் காந்தி ராமன்

திக் கொண்டிருக்கிறார்'' என்று குறிப்பிட்டிருந்தார்.

தொடர்ந்து, போலீஸ் என்னைக் கைது செய்ய முனைந்தது. மேலும் என் ஆபீஸில் இருந்தவர்களைக் கைது செய்ததோடின்றி, பட சம்பந்தமான தஸ்தாவேஜுகள், எடிடிங் தியேட்டரில் இருந்த படச் சுருள்களையும் போலீஸ் கைப்பற்றிச் சென்றது. மதுரையிலிருந்த நான், கேரளாவுக்குப் போய் விட்டேன்.

இதற்கிடையில், காலத்தை வென்றவன் படத்துக்குத் தடை விதிக்கக் கோரி, எம்.ஜி.ஆர். பெயரில் உயர்நீதி மன்றத்தில் மனுதாக்கல் செய்யப்பட, படத்துக்கு நீதிமன்றம் தடை விதித்தது.

மேலிடத்தின் தீவிரமான தூண்டுதலின் பேரில் போலீஸ் என்னைக் கைது செய்யத் துடித்தது. ஆனால் என்னைக் கண்டுபிடிக்க முடியவில்லை. என் வக்கீலை அணுகி, 'மோகன் காந்தி ராமனை, எங்கிருந்தாலும் வரச் சொல்லுங்கள், கைது செய்து, உடனடியாய் ஜாமீனில் விட்டு விடுகிறோம்' என்று கேட்டுக்கொண்டதன் பேரில்நான் சென்னை வந்தேன். போலீஸ் என்னைக் கைது செய்தது. சொன்னபடியே ஜாமீனில் விடுவிக்கப்பட்டேன்.

சில நாட்களுக்குப் பின், என் படத்துக்கு விதித்த தடையை நீக்கக் கோரி, உயர்நீதி மன்றத்தில் மனு செய்தேன். அதன் மீது எந்த முடிவும் வரவில்லை.

இதற்கிடையில், படத்தை விற்கவும், கூடுதல் பிரதிகள் எடுக்கவும் தடை விதிக்கக் கோரும் திருத்த மனு ஒன்று எம்.ஜி.ஆர். சார்பில் கோர்ட்டில் தாக்கலாகியது. இதற்கு நான் தாக்கல் செய்த எதிர் மனுவில், 'காலத்தைவென்றவன்படத்தில்எம்.ஜி.ஆர். நடித்ததாய் மக்களை ஏமாற்றவில்லை; இப்படத்தினால் அவரது புகழ் கெட்டுவிடும் என்கிற குற்றச்சாட்டையும் மறுக்கிறேன் என்றும் படக் காட்சிகளைப் பயன்படுத்த எம்.ஜி.ஆர். அனுமதி தேவையில்லை. அவற்றிற்குரிய தயாரிப்பாளர்களிடம் அனுமதி பெற்றிருக்கிறேன், அதுவே போதும் என்றும் குறிப்பிட்டேன்.

எந்த முன்னேற்றமும் இன்றியே ஐந்து மாதங்களாகி விட்டன. என் மீது வழக்கு தொடர்ந்த மத்திய குற்றப் பிரிவு போலீஸார், குற்றப் பத்திரிகையே தாக்கல் செய்யவில்லை. எனவே, அப்போதைய கமிஷனர் ஸ்ரீபாலைச் சந்தித்து, ''உடனடியாய் என் மீது குற்றப் பத்திரிகை தாக்கல் செய்யுங்கள். அப்போதுதான் நான் நிரபராதி என்று நிரூபிக்க முடியும்; இல்லையெனில் வழக்கையாவது வாபஸ் பெறுங்கள்'' என்று கேட்டுக் கொண்டேன்.

நாட்கள் கடந்தன. எம்.ஜி.ஆரே, காலத்தை வென்றவன் படத்தை வெளியிட்டால் நல்லது என்று நினைக்க ஆரம்பித்து, நண்பர் ப. நீலகண்டன் மூலம் எனக்குத் தகவல் தெரிவித்தார். நானும் எம்.ஜி.ஆரும் நேரடியாக சந்தித்துக் கொள்ளாமல், நீலகண்டன் மூலமாகவே பேச்சு வார்த்தை நடைபெற்றது. ஒரு சமாதானமான சூழ்நிலையை அடையும் தருவாயில், நீலகண்டனுக்கு உடல் நலக் குறைவு ஏற்பட்டு, பேச்சு வார்த்தை தடைப்பட்டது. பிறகு, முன்னாள் அமைச்சர் ராஜாராம் எங்களிடையே பாலமாக இருந்து வந்தார். அதனால் சில முறை எம்.ஜி.ஆரைச் சந்திக்க முடிந்தாலும் எந்த முடிவும் எடுக்கப்படவில்லை.

அப்புறம் எம்.ஜி.ஆரின் உடல்நலம் குறைவுற்றது; யாருமே அவரை அணுக முடியாத சூழ்நிலை நிலவியது.

கடைசியில் 87 நவம்பரில், எம்.ஜி.ஆர்., அவருடைய வக்கீல் ராகவாச்சாரி, இருவரையும் நான் சந்தித்துப் பேசியதன் விளைவாக, எம்.ஜி.ஆர். சார்பில் போடப்பட்ட வழக்கை அவர் வாபஸ் பெற்றுக் கொண்டார். இன்னோர் வழக்கையும் (எஸ்.கே.டி. சாமி போட்டது) வாபஸ் பெற்றுக் கொள்ளலாம் என்று சொல்லியிருந்தார்.

ஆனால் டிசம்பரில் எம்.ஜி.ஆர். மறைந்ததும், மறுபடி ஒன்றும் செய்ய முடியாத சூழ்நிலை.

அண்மையில் ஜானகி அம்மாளையும் என். சி. ராகவாச்சாரியையும் சந்தித்து விவரமாய்ப் பேசினேன். இரண்டாவது வழக்கையும் வாபஸ் பெற்றுக் கொண்டார்கள்.

எம்.ஜி.ஆர். போட்ட வழக்கு, ஜானகி அம்மாளால் திரும்பப் பெறப்பட்டதும், இதை அரசியலாக்க நினைத்தார் ஜெயலலிதா. எம்.ஜி.ஆர். போட்ட வழக்கை, ஐம்பது லட்சம் பணம் வாங்கிக் கொண்டு வாபஸ் பெற்று, எம்.ஜி.ஆருக்குத் துரோகம் செய்து விட்டார் ஜானகி என்று அறிக்கை விட்டார் அவர். இது முழுமையான கற்பனை. எனவே உண்மையை விளக்கி, நான் மறுப்பு அறிக்கை வெளியிட 'கப்சிப்' ஆகி விட்டார் ஜெ.

— எஸ். சந்திரமௌலி.

---

''என்னங்க அது, மளிகைக் கடைச் செட்டியார், வாசல்லே ஸ்பீடு பிரேக்கர் போட்டிருக்காரு...?''

''அவருக்குக் கடன் தர வேண்டியவங்க சைக்கிள், ஸ்கூட்டர், மொபட்லே வேகமாத் தப்பிச்சி ஓடிடறாங்களாம்!''

— எஸ். ராகவேந்திரா.






'**கா**தலனைப் பிரிந்த காதலி மெலிந்து வாட, வளையல்கள் கழன்று விடுகின்றன. அவை ஒன்றன் மீது ஒன்றாக ஒரு கிணறு போல் இருக்கின்றன. காதலி உகுக்கும் கண்ணீர் அந்தக் கிணற்றில் ததும்பும் நீராகி விடுகிறது'. இவ்வாறு கல்கி தீபாவளி மலருக்கு வண்ண ஓவியம் தீட்டி முடித்து விட்டார் ஓவியர். ம. செ.

'இத்தகைய ஒரு பழம் பாடல் தமிழ் இலக்கியத்தில் உண்டு; தேடித் தருகிறேன்' என்று உறுதியளித்திருந்த தமிழறிஞர். இப்போது பின்வாங்கி விட்டார்! 'எவ்வளவு தேடியும் கிடைக்கவில்லை' என்று கைவிரித்து விட்டார். இனி என்ன செய்வது? கி. வா. ஜ. வைக் கவலையுடன் அணுகினோம்.

பிரச்னையைப் புரிந்து கொண்ட வாகீச கலாநிதி, "இவ்வளவுதானே, நாளை வாருங்கள்" என்று தைரியமூட்டி அனுப்பி வைத்தார்.

மறுநாள் அவருடைய மணி மணியான எழுத்தில் அடித்தல் திருத்தல் ஏதுமின்றிக் கட்டுரை தயாராயிருந்தது. அதன் இடையில் பாடலும் இடம் பெற்றிருந்தது! தேவையான அளவுக்குப் பதவுரையும் தந்திருந்தார்.

"பாடல் அற்புதமாக இருக்கிறது. சங்க காலப் பாடலா?" என்று கேட்டோம்.

"இல்லை கி. வா. ஜ. காலப் பாடல்" என்றார் கண்களைச் சிமிட்டி, புன்னகையுடன். "நள்ளிரவு வரை தேடியும் நீங்கள் குறிப்பிட்டது போன்ற பழம் பாடலைக் கண்டுபிடிக்க முடியவில்லை. அதனால் நானே ஒரு பாடலை இயற்றி விட்டேன்!"

"ரொம்ப சிரமம் தந்து விட்டோம்" என்றோம்.

"தமிழ் இலக்கிய நூல்களைப் புரட்டிப் பார்ப்பதில் கஷ்டம் என்ன? தமிழ் எழுதுவதில்தான் சிரமம் என்ன? ரொம்ப சந்தோஷத்தைத்தான் கொடுத்தீர்கள்" என்றார்.

மற்றவர்களிடமிருந்து கி.வா.ஜ.வை வேறுபடுத்துவது இதுதான். ஒரு பிரச்னையைத் தீர்த்து வைத்தது மட்டுமல்ல; அதற்காகத் தாம் எடுத்துக் கொண்ட சிரமத்தைப் பெரிதுபடுத்தாமல், எங்கள் மனத்தையும் இலேசாக்கி அனுப்பி வைத்தார்.

**கி**.வா.ஜ. சிலேடைச் செல்வர்; அற்புதமான பேச்சாளர்; கட்டுரையாளர்; கவிஞர்; சிறுகதைச் சிற்பி; தமிழ் இலக்கியங்களில் ஆழ்ந்த புலமையுள்ள ரசிகர் என்பதெல்லாம் தெரிந்ததே. ஏராளமான நூல்களை எழுதினார்; சாகித்ய அகாதமி பரிசு பெற்றார். எல்லாத் துறைகளிலுமே தரம் குன்றிப் போய்க் கொண்டிருக்கிற இந்தக் காலத்திலும் கலைமகள் பத்திரிகையைப் பிடிவாதமாக உயர்ந்த லட்சியங்களுடன் பொறுப்பாசிரியராக இருந்து நடத்தித் தந்தார்.

கி.வா.ஜ. இளகிய உள்ளம் படைத்தவர். கு. அழகிரிசாமியின் குடும்பத்துக்கும் எல்லார்விக்கும் உதவ வேண்டும் என்று தீர்மானித்துத் தாமே தலைவராக இருந்து என்னைப் பொருளாளராக்கிக் குழு அமைத்தார். 'நம் எல்லோருக்குமே, தமிழ் இலக்கியப் பிச்சை இட வேண்டிய இவர், செல்வந்தரிடம் போய்க் கையேந்தி நிற்கிறாரே' என்று எண்ணுவேன். ஆனால் கி.வா.ஜ.வோ, 'ஒரு தகுதியான விஷயத்துக்கு ஒருவரை நன்கொடை அளிக்கச் செய்வது அவருக்கு நாம் செய்யும் நன்மையாகும்' என்பார்!

உடல்நிலை பாதிக்கப்பட்ட பிறகும் அவரால் சொற்பொழிவாற்றாமல் இருக்க முடியவில்லை; எழுதுவதை நிறுத்தவும் முடியவில்லை. 'டாக்டர் கொடுப்பது நோய்க்கு மருந்து; தமிழ், ஊட்டமளிக்கும் டானிக்' என்றார். கடைசி காலத்திலும் பழமொழிகளைத் தொகுத்து நூல் வடிவம் தந்தார். தாமே புரூப் திருத்தினார்.

தமிழ் எழுத்தாளர் கூட்டுறவு சங்கத்தில் அவர் தலைவர்; நான் பொருளாளர். இயக்குனர்கள் கூட்டத்தில் மிருதுவாக, ஆனால் உறுதியாகப் பேசுவார். தமது கருத்தை ஏற்றுக் கொண்டாக வேண்டும் என்ற பிடிவாதம் அவரிடம் இராது; ஆனால் தமது கருத்து இன்னது என்பதை அழுத்தமான முறையில் தெளிவுபடுத்தி விடுவார்.

தமிழ்த் தாத்தா பழந்தமிழ் இலக்கிய ஏடுகளைக் கண்டுபிடித்துத் தந்தார் என்றால், அதன் இயல்பான தொடர்ச்சியாக அவர் சீடர் கி.வா.ஜ., அவற்றைப் பிரபலப்படுத்தும் பணியில் சிறந்து விளங்கினார்.

ஒரு மனிதரைப் பார்க்கப் போகும் போது நாம் இருந்ததை விடத் திரும்பி வரும் போது அறிவாற்றலிலும் இதயப் பண்பிலும் நம்மையறியாமலே நாம் ஒரு படி உயர்ந்து விட்டிருந்தோமானால் அந்த மனிதரைப் 'பெரிய மனிதர்' எனலாம். அத்தகைய அபூர்வமான ஒருவர் கி.வா.ஜ.

அவரைக் காலமானவராகக் கருத முடியாது; காலத்தை வென்றவராகவே கொள்ள முடியும்.

— கி. ராஜேந்திரன்



• குடிசைக்கு நேரடி விசிட்...

தேதிகளில் தமிழகத்தில் சுற்றுப்பயணம் செய்வார்...... கிராமங்களுக்குச் சென்று 'மக்களின் குறைகளைக் கேட்டறிவார்' என்று டீ. வி. யில் செய்தி வாசிக்கப்படும் போது, இந்தச் செய்தி கபடமற்றதாகத் தோன்றினாலும், அது பகிரங்கமான தேர்தல் பிரசாரம்தான் என்பது எல்லோருக்கும் தெரியும். ஒரு மாநிலத்தின் ஒரு மூலையில் உள்ள ஒரு கிராமத்தில் உள்ள குறைகளைக் கேட்டறியப் பிரதமரே நேரில் வரவேண்டுமா, என்ன...?! ஒவ்வொரு கிராமத்துக்கும் அவர் போவதுதான் சாத்தியமா? — இந்தத் தேர்தல் ஸ்டண்ட்டின் பின்னணியில் எவ்வளவு முன்னேற்பாடும், பொருள், நேர, மனித சக்தி விரயமும் இருக்கின்றன என்பது பொதுமக்களுக்குத் தெரிய நியாயமில்லை...

ஒவ்வொரு ராஜீவ் விஜயத்திற்கு முன்னரும் தமிழ்நாடு காங்கிரஸ்

# தேர்தல் சாணக்கியங்கள்



• 'இந்தி வெறியர்' என்று இவர் தலையில் மிளகாய் அரைக்கிறார்கள்.

"**நா**மெல்லோரும் யாருங்க?" — சைக்கின் ஓட்டும் மூப்பனார் கேட்கிறார்.

"ராஜீவ் காந்தி ஆளுங்க!" — தொண்டர்கள் பதில் சொல்கிறார்கள்.

இதுதான் லேட்டஸ்ட் இ. காங்கிரஸ் போஸ்ட்டர். சுயசிந்தனையின்றித் தனி நபர் வழிபாட்டை வளர்க்கும் முயற்சியில் இ. காங்கிரஸ் மற்ற எல்லாக் கட்சிகளையும் தோற்கடித்துவிடும் போல் தோன்றுகிறது!

'பிரதமர் திரு ராஜீவ் காந்தி இம்மாதம்... கமிட்டி சென்னையில் ஸ்வாகத் ஹோட்டலில் கூடி, பயணத் திட்டத்தைத் தயாரிக்கிறது. குறிப்பிட்ட மாவட்டங்களைத் தேர்ந்தெடுத்து அங்குள்ள வழிபாட்டு ஸ்தலங்கள், நினைவாலயங்கள், தியாகிகள் அல்லது தலைவர்களின் சமாதிகள் என்று மக்களுக்கு உணர்வுபூர்வமான பந்தம் உள்ள இடங்களையெல்லாம் ராஜீவ் 'விசிட்' செய்யும்படி திட்டம் தீட்டப்படுகிறது. இந்த ரூட்டில் இருநூறு கி. மீ. இடைவெளியில் தங்கும்

வசதியும் ஹெலிகாப்டர் தளங்களும் இருக்கு மாறு கவனித்துக் கொள்கிறார்கள். இந்த விவரங்கள் பிரதமர் அலுவலகத்துக்கு அனுப்பப்பட்டு அங்கிருந்து பாதுகாப்பு அதிகாரிகளின் ஒப்புதலுடன் திரும்பி வரும் வரை திட்டம் ரகசியமாகவே இருக்கும்.

பிரதமர் விஜயத்திற்குச் சில நாட்கள் முன்னதாகவே பாதுகாப்பு ஊழியர்கள் 'ரூட்'டைக் கண்காணிக்க ஆரம்பிக்கிறார்கள். இரவு பிரதமர் தங்கும் இடத்துக்கு ஏ.ஸி. வசதி. தில்லியுடன் பேச 'ஹாட் லைன்' போன்றவை நிறுவப்படுகின்றன. உள்ளூர் விவகாரங்கள், வாழ்க்கை முறை போன்றவை பற்றி ராஜீவுக்கு மணி சங்கர அய்யர் — ஜி. பி. யும் பழக்க வழக்கங்கள், பாரம்பரிய உடை போன்றவை குறித்து சோனியாவுக்கு ஜெயந்தி நடராஜன் — வைஜயந்திமாலாவும் எடுத்துச் சொல்கிறார்கள்.

மாவட்டக் கலெக்டர்கள் அதிகாரிகளை முடுக்கிவிட, அவர்கள் கிராம நிர்வாக அதிகாரிகளை மேற்பார்வையிட, ராஜீவ் எந்த கிராமத்திலும், எந்தக் குடிசையிலும் நுழையக்கூடும் என்பதால், ஆங்காங்கே ஐம்பது பாட்டில் குளிர் பானம், இளநீர், உயர்ரக சோப்பு, கைதுடைக்கத் துவாலைகள், மினரல் வாட்டர் என்று பொருள்கள் வாங்கி வைக்கப்படுகின்றன. இவற்றில் எவ்வளவு உபயோகப்படும் என்பது பற்றி யாருக்குக் கவலை...!

சுமார் ஐம்பது பாதுகாப்பு அதிகாரிகள், ஒரு மருத்துவக் குழு, ஓர் அவசரம் என்றால் உபயோகிக்க ஆறு பாட்டில் ரத்தம், போக சாமக் கிரியைகளுடன், சுங்குடிப் புடைவை, ஒற்றைப் பின்னல், நெற்றிப் பொட்டு அணிந்து 'தமிழ்ப் பெண்ணாக' சோனியா உடன் வர, ராஜீவ் காந்தி தமிழகம் வந்து சேர்கிறார். காலை பத்து மணிக்கு ஆரம்பித்து இரவு பதினொரு மணி வரை எம். ஜி. ஆர். பாணியில் சூறாவளிச் சுற்றுப் பயணம் செய்கிறார். 'எனக்கு வயதாகிவிட்டது. இந்த மனுஷனின் வேகத்துக்கு ஈடு கொடுக்க முடியவில்லை!' என்று மூப்பனார் தமாஷ் செய்யும் அளவிற்குக் கிராமம் கிராமமாகப் போகிறார். குழந்தைகளுக்குப் பெயர் சூட்டி, கிழவிகளுக்கு ஆறுதல் சொல்லி, மின்சாரம் இல்லாத ஓர் இடத்திற்கு 'சோலார் எனர்ஜி' மூலம் அதனைத் தர முடியுமா என்று பார்க்கச் சொல்லிச் சிபாரிசு செய்து, உறுமி மேளக்காரரின் குடிசைக்குள் நுழைந்து, அவரை வாசிக்கச் சொல்லி ரசித்து... தமிழக கிராமங்களை ஒரு கலக்குக் கலக்கி வருகிறார் — ராஜீவ்.



* கூட்டம் (அனுதாப) அலை மோதுகிறது!

டிகாக்ஷன் காப்பி பருகி, வாழை இலை போட்டுச் சாப்பிட்டுத் தமிழக மக்களுடன் ஒன்றும் முயற்சி ஒருபுறமிருக்க, இன்னொரு புறம் 'ஹிந்தி வெறியர்களை ஆதரிக்கும் தி. மு. க. வுக்கா உங்கள் ஆதரவு?' என்று தோசையைத் திருப்பிப் போடுகிறார் ராஜீவ்.

காங்கிரஸ் பிரசாரக் கூட்டங்களில் திராவிட பாரம்பரியத்தின் பிடியில் தமிழ்நாடு குட்டிச்சுவராகிவிட்டது என்ற பேச்சு ஆரம்பத்தில் நிறைய அடிபட்டது. இந்தப் பேச்சு புத்திசாலித்தனமானதல்ல என்று உணர்ந்து, இப்போது அவ்வாறு பட்டவர்த்தனமாகப் பேசுவதை விடுத்து, மொழிப் பிரச்னை பக்கமும் வன்னியர் போராட்டத்தின் பக்கமும் பிரசாரம் திசை திரும்பியிருக்கிறது. வன்னிய — ஹரிஜன கலவரங்களைக் கட்டுப்படுத்தச் செய்து, ஓர் ஒப்பந்தத்திற்கு அவர்களை உடன்படச் செய்து, பிரச்னையைத் தாற்காலிகமாக கவர்னர் மூட்டை

* இது நம்ம தமிழ்நாடுங்க... ஜமாய்ச்சுடலாம்......





• தமிழ்நாட்டுக்கு வந்தால் தக்க உடையில்தான்......

கட்டி வைத்துள்ளதே இ. காங்கிரசின் சாதனையாகக் காட்டிக் கொள்ளப்படுகிறது. வன்னியர்களைச் சாந்தப்படுத்திவிட்டு, ஹரிஜனங்களை விட்டுவிட முடியுமா....? தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி தலைவர் மூப்பனார், வேலை மெனக்கெட்டு ராஜஸ்தானுக்குப் போய் நாத்வாரா கோயிலில் ஹரிஜன ஆலயப் பிரவேசத்தில் கலந்து கொண்டது ஹரிஜனங்களின் நல்லெண்ணத்தைப் பெறும் முயற்சியே.

தேர்தல்களை ஒத்தி வைத்ததால் கிடைத்த அவகாசத்தை முழுமையாகப் பயன்படுத்திக் கொண்டுள்ளது இ. காங்கிரஸ். தமிழகத்தின் மற்ற எல்லாக் கட்சிகளிலும் பிரிவினையும் உட்கட்சிப் பூசலும் உருவாக வகை செய்துள்ளதோடு, ஆளுனர் ஆட்சியில் எடுக்கப்படும் சிறந்த நடவடிக்கைகள் எல்லாவற்றுக்கும் இ. காங்கிரஸ் வர்ணம் பூசி ஊ. வி. என்ற பிரம்மாஸ்திரம் மூலம் அவற்றை மீண்டும் மீண்டும் மக்களுக்கு நினைவுபடுத்திக் கொண்டிருக்கிறது.

தமிழ்நாட்டில் எண்பது சதவிகித மக்களைச் சென்றடையும் தொலைக்காட்சி ப. சிதம்பரம் தமிழக மக்களுக்குத் தெரிவித்த தீபாவளி வாழ்த்துக்களைத் தலைப்புச் செய்தியாக்குகிறது. ஒவ்வொரு ராஜீவ் விஜயமும் ஒரு முழுநீள சினிமா போல் அக்கறையுடன் காண்பிக்கப்படுகிறது.

ஆளுனர் ஆட்சியில் அரசாங்க ஊழியர்களுக்கு ஊதிய உயர்வு அறிவித்ததன் மூலம் மத்தியதர வகுப்பினரைத் திருப்திப்படுத்தியதோடு, அகில இந்தியாவிலும் சத்துணவுத் திட்டத்தை அமுல்படுத்தும் யோசனையை அ. இ. கா. க. கூட்டத்தில் கிளப்பி ஏழை பங்காளன் 'இமேஜை' வளர்த்துக் கொள்கிறது, காங்கிரஸ்.

அரிசிச் சோற்றை ஓர் ஆடம்பரமாக, விழாக் காலச் சிறப்புணவாக எண்ணி வாழ்ந்து வந்த கிராமவாசிகளைக் — குறிப்பாகப் பெண்களை, — குழந்தைகளுக்குச் சத்துணவாக அரிசிச் சோறு போட்டதன் மூலம் நிரந்தர அபிமானிகளாக்கிக் கொண்டார் எம். ஜி. ஆர். அபிவிருத்தித் திட்டங்களுக்குப் பணமில்லாமல் முந்நூறு கோடி வரை வரிப் பணம் இதற்கே செலவானாலும் இத் திட்டத்தை இனி எந்தக் கட்சியும் கைவிடவோ குற்றம் கூறவோ துணியாது. ஆக, சத்துணவுத் திட்டமும், வோட்டுப் பிடிக்கும் ஒரு சாதனமாகிவிட்டதேயொழிய குழந்தைகளிடம் மெய்யான பரிவினால் நிறைவேற்றப்படுவது அல்ல.

ஆறு மாதங்களுக்கு முன்பு இருந்த வலிமை இப்போது தி.மு.க. விடம் கிடையாது. தேசிய முன்னணி ஊர்வலமும் கூட்டமும் பெரும் வெற்றி அடைந்தன என்றாலும் தமிழ்க் காவலராக மக்கள் மனங்களில் இடம் பிடித்திருந்த கலைஞர் 'இந்தி வெறியர்' தேவிலாலுடன் அரசியல் கூட்டு வைத்துக் கொண்டதை ஒரு சந்தர்ப்பம் விடாமல் சொல்லிக் காட்டிக் கொண்டிருக்கிறார்கள் இ. காங்கிரஸார்.

கலைஞர் என்னதான் சமாதானம் சொன்னாலும், 'தெற்கே ஹிந்தியைப் பரப்புவதை விடுத்து, தேவிலால் தமிழ் வெறியர் கருணாநிதியுடன் இணைந்துள்ளார்' என்று உ. பி. யில் ராஜீவ் பேசியதை அன்பழகன் சுட்டிக் காட்டினாலும் ஆக்கிரமிப்பு நிலையிலிருந்து இவ்வாறு தற்காப்பு நிலைக்குத் தள்ளப்பட்டுள்ளது தி. மு. க. வுக்குச் சோதனைதான். போதாக்குறைக்கு முஸ்லிம் லீகுடன் பிணக்கு, ஸ்டாலின் முன்நிறுத்தப்படுவதால் ஏற்படும் உட்கட்சிப் பூசல்கள் என்று தி. மு. க. வில் டென்ஷன் அதிகமாகியுள்ளது.

கறைபடாத கரங்களையுடைய இளைஞர்களைத் தேர்ந்தெடுத்துத் தேர்தலுக்கு நிறுத்துவதில் கலைஞர் ஆர்வம் காட்டுகிறார் என்றும் இப்புதிய முகங்களின் வருகையால் பழைய முகங்கள் வாட்டமுற்றதால், பதவிக்கு வந்த பிறகு, தமிழகத்தில் மீண்டும் மேலவையை நிறுவி எல்லோருக்கும் இடம் கொடுப்பதாகச் சமாதானம் கூறி வருகிறார் என்றும் நம்பத் தகுந்த வட்டாரங்களில் பேசப்படுகிறது.

இ. காங்கிரஸுக்கு ரெடிமேட் பிரசாரக் கருவியாக ஊ. வி. இருக்கிறதென்றால் கலைஞர் கைவசம் சினிமா, தினசரி, வாரப் பத்திரிகை என்று வரிசை வரிசையாக ஆயுதங்கள். சினிமாவில் ஒளிவு மறைவின்றிக் கட்சிப் பிரசாரம் கலப்பதும் எதிர்க்கட்சிகளைச் சாடுவதும், தினசரி மூலம் 'உடன்பிறப்புகளுக்கு' அறைகூவல் விடுப்பதும், தேர்தலையொட்டி தமது வார இதழில் வன்னியர்களைப் போற்றும் வகையில் ஒரு தொடர் ஆரம்பிப்பதும் கலைஞருக்கே உரிய சாணக்கியங்கள்.

தேர்தல் நெருங்கும் நேரத்தில் கிராமப்புறங்களில் என். டி. ஆரும் நகர்ப்புறங்களில் வி. பி. சிங்கும் தி. மு. க. வுக்காகத் தமிழகத்தில் பிரசாரம் செய்வார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இதற்கிடையில், மக்களின் இதய தெய்வமாகிவிட்ட எம். ஜி. ஆரைச் சாடாமல், இ. காங்கிரஸை மட்டுமே சாடிப் பிரசாரம் செய்யும்படி தி. மு. க. தொண்டர்கள் கேட்டுக் கொள்ளப்பட்டிருப்

பதாக்வும் கூறப்படுகிறது. பிரிந்து சென்ற முஸ்லிம் லீகையோ, குறிப்பிட்ட சாதியினரையோ தாக்காமலும், நாஸ்திகம் பேசாமலும் பிரசாரம் செய்யவும் தொண்டர்களுக்கு அறிவுறுத்தியுள்ள கலைஞர், பிராமணர்கள் உள்பட எல்லா இனத்தவருக்கும் ஸீட்டுகள் தரப் போவதாகச் செய்திகள் அடிபடுகின்றன.

புரட்சித் தலைவர் தம்மிடம்தான் தமிழ்நாட்டைக் காப்பாற்றும் பொறுப்பை ஒப்படைத்துச் சென்றதாகவும் அவர் இட்ட பணியை நிறைவேற்றவே தாம் உயிரோடு இருப்பதாகவும் பேசி, ஆரம்பம் முதலே அனுதாப அலையைக் கிளப்ப முயன்று வருகிறார் செல்வி ஜெயலலிதா.

அனுதாப வாக்குகளோடு, சினிமா கவர்ச்சிக்காக விழும் வாக்குகளும் இவருக்கு உண்டு. மேலும் எம். ஜி. ஆருடன் இவருக்கு இருந்த நெருக்கம் வெட்ட வெளிச்சமானது. இதனால் இவருக்கு மனோதத்துவ ரீதியில், பெண்களிடையே அனுதாபமும் ஆண்களிடையே ஒருவித ஈர்ப்பும் உண்டு.

ஏற்கெனவே தமக்குச் சாதகமாக உள்ள இந்த விஷயங்களைச் செல்வி நன்றாகவே பயன்படுத்தி வருகிறார். தமது கட்சிக் கூட்டங்களில் எம். ஜி. ஆருடன் தாம் நடித்த படங்களைப் போடச் செய்கிறார்; இலவச மருத்துவ முகாம்கள் நடத்தி அங்கு வருவோருக்குத் தமது புகைப்படம் பதித்த அடையாள அட்டை வழங்கச் செய்கிறார்; எம். ஜி. ஆருக்குச் சிறுநீரக தானம் அளித்த லீலாவதியை மேடையில் நிறுத்தி மக்களைக் கவர முயற்சி செய்கிறார். எம். ஜி. ஆரைப் போலவே நள்ளிரவிலும் சுறுசுறுப்பாகச் செல்கிறார். நாள் முழுதும் இவர் வருகைக்குக் காத்திருந்த தொண்டருக்கு இரவு இரண்டு மணிக்குத் திருமணம் செய்து வைக்கிறார்.



'என் தமிழ்; என் மக்கள்...' எனக்கு வெற்றி உண்டா...?

செல்வி நடத்தும் மருத்துவ முகாம்களில் பெரிய, பெரிய ஸ்பெஷலிஸ்டுகள் எல்லாம் கிராமவாசிகளின் நெஞ்சில் ஸ்டெத்தைப் பொருத்திக் கொண்டே, 'தேர்தல் வந்தா நீங்க யாருக்கு வோட்டுப் போடுவீங்க' என்று கேட்டாலும், மக்கள் அந்த அரசியல் நோக்கத்தைப் பெரிதுபடுத்தாமல் செல்வியைப் பாராட்டுகிறார்கள். பாராட்டு வோட்டாக மாறுமா...? பொறுத்திருந்து பார்க்க வேண்டும்.

ஜெயலலிதாவின் சாணக்கியங்களுக்கெல்லாம் எதிரி அவரது பேச்சுத்தான். உடன்கட்டை விவகாரமும் நால்வர் அணி விலகிய போது அவர் சொன்ன உவமையும் மேல் மட்ட வாக்காளர்களிடையே அவருக்கிருந்த ஓரளவு ஆதரவையும் அடியோடு ஒழித்துக் கட்டிவிட்டது. சசிகலா — நடராஜன் சகவாசம் கட்சிக்குள் அவரது இமேஜின் வீழ்ச்சிக்கு வழி வகுத்துள்ளது.

விவசாயக் கடன்கள் ரத்து, வேலை வாய்ப்பு உத்தரவாதம், சத்துணவுத் திட்டம் விஸ்தரிப்பு, இலவச மின்சாரம், கர்ப்பிணிப் பெண்களுக்கும் முதியோருக்கும் இலவச மருத்துவம், இலவச பஸ் பயணம் போன்ற இவரது வாக்குறுதிகளை எளிய மக்கள் கூட 'சீரியஸாக' எடுத்துக் கொள்வதாகத் தெரியவில்லை.

ஜா. அணி இ. காங்கிரஸுடன் கூட்டுச் சேர வேண்டும் என்பதற்காக பண்ருட்டியார் முயன்று வருவதாகத் தெரிகிறது. இவர் முயற்சி வென்றால் கழுதை தேய்ந்து கட்

தலைவிக்கு ஆரத்தி எடுத்து, ஆராதித்து......!



டெறும்பான கதையாக இந்த அணி மேலும் பிளவுபட்டுச் சிதறிப் போகும். ஆரம்பத்தில் சுற்றுப்பயணங்கள் மேற்கொள்ள மிகவும் தயங்கிய ஜானகி எம். ஜி. ஆரை களக்கு வித்துக் களத்தில் இறக்கிய ஆர். எம். வீ., முத்துசாமி போன்றோர் இ. காங்கிரஸ் கூட்டை எதிர்க்கிறார்கள்.

பிரசாரக் கூட்டங்களில் மிதமாகவே பேசி வரும் ஜானகி எம். ஜி. ஆர்., தொண்டர்கள் வீட்டுக் கிரகப் பிரவேசம், மஞ்சள் நீராட்டு விழா போன்றவற்றில் தவறாமல் கலந்து கொள்வதோடு, கோயில்களுக்கும் சென்று வருகிறார். திருவேற்காடு கோவிலில் இவர் தங்கரதம் இழுத்து, பக்தர்கள் மனம் கவர்ந்தார். தம்மிடம் உதவி கேட்டு வருபவர்களுக்கு, எம். ஜி. ஆர். போலவே, இல்லை என்று சொல்லாமல் வழங்கும் இவரது குணமும் இவருக்குச் சாதகமானது.

ஆட்சியைப் பிடிக்காவிட்டாலும் ஒரு சில இடங்களையாவது கைப்பற்றும் நம்பிக்கையுடன் இவரது பிரசாரம் தொடர்கிறது.

சமீபத்தில் சிவாஜி கணேசனின் பிறந்த நாள் விழாவுக்கு எதிர்க்கட்சியினரே ஆச்சரியப்படும் அளவிற்கு வந்த கூட்டம், தமிழக முன்னேற்ற முன்னணியின் சக்தியை மறுபரிசீலனை செய்யத் தூண்டுகின்றது. வாக்குறுதிகளை வீசாமல் இ. காங்கிரஸை எதிர்ப்பதோடு திருப்தியடையும் சிவாஜி, சினிமாவைப் பிரசார சாதனமாகவே முழுக்க முழுக்கப் பயன்படுத்திக் கொள்கிறார். 'என் தமிழ், என் மக்களை'த் தொடர்ந்து இப்போது, 'பாரம்பரியம்' தீபாவளி ரிலீஸ். வன்னியர் வட்டாரங்களில் சிவாஜி கட்சியின் கொடி மட்டும் பறக்க அனுமதிக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

சினிமா மூலம் கட்சிப் பிரசாரங்கள் நடப்பது ஒருபுறமிருக்க சினிமா நட்சத்திரங்களைத் தங்களுக்குப் பிரசாரம் செய்யும்படி ஒவ்வொரு கட்சியும் கேட்டுக் கொண்டிருக்கிறது. திரை வாழ்வை நிஜ வாழ்வாகவே எண்ணி வாழ்கின்ற எளிய மக்களை இவ்வாறு கவர முயற்சி நடக்கிறது.

ஏதேனும் ஒரு கட்சி அதிகமான வோட்டுக்களை அறுவடை செய்து வெற்றி பெறத்தான் போகிறது. ஆனால் தமிழகத்தின் மேம்பாட்டுக்குரிய சிறந்த கொள்கைகளின் அடிப்படையிலும் மேலான சாதனைகளின் அடிப்படையிலும் வோட்டுக்களைப் பெறாமல், வசை புராணங்கள், தந்திர மந்திரங்கள், ட. வி. — சினிமா மாயை ஆகியவற்றின் அடிப்படையிலேயே எல்லாக் கட்சிகளும் வோட்டுக்களைப் பெற முயல்வதால் இந்தத் தேர்தல் நிச்சயமாக ஆரோக்கியமான ஜனநாயகத்துக்குப் படுதோல்வியே!

— நமது நிருபர்கள்

மேலட்டை வண்ணப்படங்கள்:
கே. வி. ஆனந்த்.
புகைப்படங்கள்: ஜார்ஜ் ஃப்ரான்சிஸ், சுபா, கே. வி. ஆனந்த்.

## அடுத்த இதழில்...





## NAVAJEEVAN SOCIAL WELFARE CENTRE

(A unit of NBRC)

TIRUMALA HILLS, VIA TIRUPATHI-517 504.

### நவஜீவன் நற்பணி மன்றம் - திருப்பதி - திருமலை.

ஸ்ரீ காஞ்சி ஆச்சார்ய ஸ்வாமிகளின் விசேஷ அனுக்கிரஹத்துடன் நடை பெற்ற ஸ்ரீ வெங்கடேச்வர கோடி நாம எழுத்து வேள்வியின் இலவசப் புனிதப் பயணத் திட்டத்தின் கீழ் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆஸ்திகர்களின் பெயர், SVK நெம்பர் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

கடந்த ஆகஸ்ட் மாதத்தில் கல்கி போன்ற தமிழ் பத்திரிகைகளின் வாயிலாக நாங்கள் வேண்டிக் கொண்டபடி கண்கண்ட தெய்வமான ஸ்ரீ வெங்கடேசப் பெருமானின் திவ்ய நாமத்தை எழுதி அனுப்பிய எல்லா ஆஸ்திகர்களுக்கும் நவ ஜீவன் சார்பாக மனமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.

SVK நெம்பருடன் அச்சிட்ட படிவத்தில் (Printed Form) மட்டுமே எழுதி அனுப்பிய சுமார் 15 ஆயிரம் ஆஸ்திகர்களில், 108 அன்பர்களை குலுக்குச் சீட்டு முறையில் 8.11.88 தீபாவளி அன்று, திருப்பதி ஸ்ரீ ஏழுமலையானின் ஸன்னிதானக் அருகில் பக்தர்களின் முன்னிலையில் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். தேர்ந்தெடுக்கப்பட்ட 108 ஆஸ்திகர்களுக்கும் உடனடியாக Regd. Post மூலமாக பூஜைக்குரிய ஒரு வெள்ளிக்காசு டாலரும், ஏழுமலையானின் விசேஷ பிரசாதமும் அனுப்பியுள்ளோம். தவிரவும் இலவசப் புனிதப் பயணமாக திருப்பதி யாத்திரை வந்து செல்ல ஆகும் செலவை கணக்கிட்டு M.O. மூலமாக தனியாக அனுப்பியுள்ளோம். மேலும் Printed Form அல்லாத பேப்பரிலும் தனிப்பட்ட முறையில் பக்தி சிரத்தையுடன் எழுதி அனுப்பிய ஆயிரக்கணக்கான ஆஸ்திகர்களுக்கும் அவர்களின் சார்பாக விசேஷ பிரார்த்தனை, பூஜை செய்வித்து மஹா பிரசாதம் தபால் மூலமாக அனுப்பி வருகிறோம். இந்த ஆன்மீக வேள்வியில் கலந்து கொண்ட எல்லா ஆஸ்திக அன்பர்களுக்கும் ஸ்ரீ ஏழுமலையானின் அனுக்கிரஹம் கிடைக்க வேண்டுகிறோம்.

SVK NO.46 சிவ. சிவாஜி 67 Mrs. யோகிதாசன் 92 M.G. சுந்தரம் 94 R. நாக சுந்தரி 153 G.R. சீதாலஷ்மி 480 A. தேவராஜ் 552 S. முத்துபட்டர் 567 R. சசிரேகா 576 S. பாலவண்ண சுந்தரம் 593 K. சரோஜா 609 K. காயத்ரி 732 K.K. ஜெயலஷ்மி 769 P.V. ஜனகவல்லி 909 S. ராஜேஸ்வரன் 941 S. ராமநாதன் 955 S. கிருஷ்ணசாமி 1119 M. குமரன் 1165 N. பத்மினி 1167 V. முத்துலஷ்மி 1210 S. கோவிந்தம்மாள், 1213 R. லலிதா 1258 R. திலோத்தம்மாள் 1319 M. காந்திமதி 1350 S. சேதுராமன் 1604 S. வெங்கடாச்சாரி 1984 N. பாலசுப்ரமணியன் 2019 கல்யாணி 2409 ராஜம் ஆறுமுகம் 2445 அனுராதா 2542 M.M. பழனிசாமி 2576 ஆனந்தவல்லி 2870 புவனாமாமி 3093 R. ஜகன்னாதன் 3147 S. ஞான சுந்தரம் 3185 T. கதிரேசலு 3188 M. ராமன் 3221 சாந்தி 3263 S. நாகலஷ்மி 3382 T. மீனா 3428 R. கிருஷ்ணன் 3752 R. பழனிச்சாமி 3772 T.K. ராகவன் 3773 S. ராதாகிருஷ்ணன் 3906 Mrs. சித்ரா 4110 சீதா 4320 R. புவனேஸ்வரி 4369 S. கோபால கிருஷ்ணன் 4474 R. அமிர்தா 5258 விஷ்ணு வரதன் 5643 R. ஸ்ரீனிவாசன் 6026 S. லஷ்மி, 6147 V. ரவிச்சந்திரன் 6231 V. மீனாமணி 6493 P. சுபஸ்ரீ 6579 V. கிருஷ்ணசாமி 6766 P.S.S. நாராயணன் 6811 R. சரோஜா 6883 V. வைதேகி 6900 V. சீதா 6968 R. விஜயலஷ்மி 7088 Mrs. உஷா 7573 P.G. சித்ரா 7635 R. ஸ்ரீதர் 7845 அனு 7964 S. வைதேகி 7996 S. மைதிலி 8060 K.R.N. நிவேதிதா 8246 C.N. முருகதாஸ் 8658 N. கோமளா, 8949 K. ராமசாமி 8993 சுஜாதா 9062 S. வெங்கட்ராமன் 9070 ராணி 9116 S. வரதராஜன் · 9393 D.R.S. வடிவு 9419 P.S. வெங்கடேசன் 9599 P. தனஞ்செயன் 9654 C. கற்பகம் 9686 K.V. சுப்ரமணியன் 9713 T. வெங்கடேசன், 9884 P.P. கருப்பக்கோன் 9892 K. சாமிப்பிள்ளை 9958 S.S. விநாயகம், 9979 M. சுசிலாம் 10118 E.S.S. கிருஷ்ணன் 10182 D. துரைசாமி 10520 K. ராமமூர்த்தி 10552 S. மகாதேவன், 10680 G. சீனுவாசன் 10778 N. அலமேலு 11051 K. சுந்தரராஜன் 11199 G. அலமேலு 12032 S. நாதமுனி 12135 P.V. ராமமூர்த்தி 12419 N.L. பத்மாவதி 12444 விஜயலஷ்மி 12899 கோமதியம்மாள் 12917 N. ரங்கமணி 12933 G. சாந்தி 12955 N. ஜெயராமன் 13057 சீதா 13401 R.S. சங்கர் 13601 S.S. ராஜன் 14045 K. சங்கர் 14073 Y. சத்யவரதன், 14170 K.R. ராஜம்மாள் 14454 லீலா 14548 வரலஷ்மி.

# BONNY MIX®

## The new instant porridge. With the goodness of cereals, fruits and nuts.

Bonny Mix is a nourishing, easy-to-digest porridge made from wheat, corn, rice, coconut, apples, dates, raisins and cashewnut. It's good for the whole family at breakfast or in the evening after school or office. Also for elderly people and convalescents.




**Ready in minutes**

Bonny Mix is so quick and easy to prepare.
All you do is:




Put the required quantity of Bonny Mix into a bowl.




Add enough pre-boiled milk.




Mix into a smooth porridge.




Your family will love every delicious spoonful.

**Bonny Mix®**

*For the first time in India!*



**From Glindia Ltd (formerly Glaxo)**

The most trusted name in family foods.

Available in selected markets at present.

GL/2/88

# வட்டமேஜை

* கேரளச் சிறப்பிதழ் — II வெகு சிறப்பு. ஆன்மீகத்தில் இவ்விதழ் சுகந்த பரிமளமாக விளங்கி இன்பந் தருகின்றது. அனந்த பத்மநாபர் கோவில் வரலாறு ரத்தினச் சுருக்கம் — அற்புதம். கோயிலின் தூய்மை, குளத்தின் தூய்மை! விமரிசனம் வெகு சுச்சிதம்.

பட்டுக்கோட்டை, ச. இராகவேந்திரன்.

* 'கொச்சித் துறைமுகமும் கொள்ளையழகுப் பயணமும்' கட்டுரை, ஏதோ ஒரு வெளிநாட்டுப் பயணக் கட்டுரையைப் படித்தது போன்ற உணர்வை ஊட்டி விட்டது!

சீர்காழி, எஸ். பரமசிவம்.

* இ. காங்கிரஸின், சுயநல ஆட்சிக் கண்ணோட்டத்தில், மத்திய — மாநில அரசுகளுக்கிடையில் நிலவும் விரிசல்கள், மத்திய அரசின் தவறுகள், ராஜீவ் காந்தியின் அரசியல் குற்றங்கள், எதிர்க்கட்சிகள் செயல்பட வேண்டிய விதம், தனது ஆட்சியின் குறைநிறைகள், தமிழக மக்களுக்கு அரசியல் வழிகாட்டுதல் — என நமது பேட்டியின் மூலம், நாயனார் மிக விரிவான அரசியல் விளக்கவுரையே ஆற்றி விட்டார்!

வேலாயுதம்பாளையம், எம். சம்பத்.

## சிரிப்பு வெடிகளைக் காணோமே!

* தமிழகத்தின் தென் மாவட்ட மக்கள் கேரளாவில் பாயும் மேற்கு நதிகளைத் தமிழகத்திற்குத் திருப்ப வேண்டும் எனப் பல காலமாகப் போராடி வருகின்றனர். அதைப் போன்று கண்ணகி கோவில் பிரச்னையும் முக்கியமானது. இந்த இரண்டு பிரச்னைகளைத் தீர்க்கச் சென்னை உயர் நீதி மன்றத்தில் ரிட் மனுக்கள் தாக்கல் செய்துள்ளேன். மேற்கு நதி நீர்ப் பிரச்னை, கண்ணகி கோவில் பிரச்னை பற்றிப் பல பக்கங்கள் அடங்கிய ஆவணங்களை அனுப்பியும் கல்கி பேட்டியில் கேரள முதல்வரின் பதில் ஏதோ ஒப்புக்குக் கூறப் பட்டுள்ளது.

சென்னை — 5, எஸ். ராதாகிருஷ்ணன்.

* 'வங்கத்தில் சாந்திநிகேதன்; கேரளத்தில் கலா மண்டலம்...' என்று தலைப்புக் கொடுத்திருக்கிறீர்களே! 'தமிழகத்தில் கலாக்ஷேத்ரா கேரளத்தில் கலா மண்டலம்' என்று போடக் கூடாதா? உவமானம் பொருந்தாதா?

திருநெல்வேலி — 7, எஸ். கலைவாணன்.

* மாதவன் நாயரின் சாதனை மற்றவர்கள் காதில் விழ வேண்டும் என்ற உங்கள் ஆதங்கம் நியாயமானது.

சென்னை — 5, சித்ரபானு.

* காலடி பற்றிய ஸ்தல வரலாற்றைக் கூறும் பொழுது சிருங்கேரியின் முப்பத்து மூன்றாவது பீடாதிபதியை ஜகத்குரு ஸ்ரீ லச்சிதானந்த சிவாபிநவ நரசிம்மபாரதி சுவாமிகள் என்றே குறிப்பிட்டிருக்க வேண்டும். அதுவே முறை.

துறையூர், வி. ஜே. அவதானி.

* கேரளச் சிறப்பிதழ்கள் இரண்டும் இதுவரை கேள்விப்படாத பல புதிய செய்திகளைக் கொண்டிருந்தன. நல்ல முயற்சிக்கு இதயங்கனிந்த பாராட்டுக்கள்.

மோட்டாம்பட்டி, கோழியூர் சிங்காரபாலன்.

* 'தேர்தல் களத்தில் விடை எழுதுங்கள்' கட்டுரையில் டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி அவர்கள் சொன்ன அறிவுரைகள் காலத்துக்கேற்றவை. தமிழகத்தைப் பிடித்துள்ள அறியாமை நோய் தோன்றிய விதம் — அதை விதைத்தவர்கள் — அதைக் களையும் அவசியம் பற்றி ஆணித்தரமாகக் கூறியுள்ளார். அதனை முதல் பக்கத்தில் வெளியிட்ட உங்களுக்குப் பாராட்டு!

கருமத்தம்பட்டி, அ. இராஜப்பன்.

* 'அருவி' அறிமுக எழுத்தாளர் என்று என்னால் நம்பவே முடியவில்லை. 'படித்தவர்கள்' சிறுகதையில், அரசு ஆஸ்பத்திரியின் அவலநிலையினை அருமையாகப் படம்பிடித்துக் காட்டியுள்ளார். இருந்தாலும், ஆஸ்பத்திரியில் இப்படி நடக்கும் என நான் நினைத்துக் கூடப் பார்க்கவில்லை, சார்!

அச்சம்பாடு, பெனிட்டோகுமார்.

* ஏன் சார்! 6.11.88 கல்கியில் 'நீரில் மிதக்கும் நிலா' கதைக்குத் தொடரும் போடவில்லையே? மறந்து விட்டீர்களா?

தக்கோலம், அ. முஸ்தபா.

* தீபாவளிச் சிறப்பிதழ் சிரிப்பிதழாக இல்லையே...? நகைச்சுவை வெடிகள் அதிகமாக இருக்கும் என நினைத்து, கல்கியைப் புரட்டிய எனக்குப் பெருத்த ஏமாற்றம்தான்!

குத்தாலம், வி. சுந்தர்ராமன்.

* சினிமா 'இளைஞர்களைக் கெடுக்கும் விஷயம்' என்கிற பொதுவான கருத்தை விடுத்து, சினிமா என்கிற கலையினை மட்டுமே எடுத்துக் கொண்டு, அந்தக் கலையின் நுணுக்கங்களை, அக்கு வேறு ஆணி வேறாகத் திறனாய்வு செய்து, இளைய சமுதாயத்தினர் அறிந்து கொள்ள — ஒரு புதிய பாடத் திட்டத்தையே வகுத்திருக்கும் லயோலா கல்லூரி பேராசிரியர்களை எத்தனை பாராட்டினாலும் தகும்!

கொரட்டூர், கே. என். ஸ்ரீனிவாஸ்.

* 'ஜனநாயகத்தில் ஆட்சிக்கு வருகிறவர்கள் அரசியல்வாதிகளாக இருந்தால் போதாது. அரசியல் ஞானிகளாய் இருக்க வேண்டும்' என்கிற தலையங்கத்தின் வேண்டுகோளில் நியாயத்தின் வெளிப்பாடும் ஜனநாயகத்தின் போற்றுதலும் இணைந்து காணப்படுகிறது. வரவேற்க வேண்டிய தலையங்கம்.

பெங்களூர், ப. மூர்த்தி.

* வெகு நாட்களுக்குப் பின் தராசுவின் பதில்களில் தான் நகைச்சுவையின் வெவ்வேறு பரிமாணங்களை மனமார ரசிக்க முடிந்தது. திரும்பத் திரும்ப மனத்தில் உருப்போடுவது போலப் படித்து ரசித்துக் கொள்கிறேன். மனமார்ந்த பாராட்டுக்கள்.

சென்னை — 13, ந. சந்தானம்.


புதிய அமெரிக்க ஜனாதிபதி
'புஷ்'ஷுக்கு செனெட்டில் கட்சி
மெஜாரிட்டி இல்லை!


டெல்லி ஆட்சி


தமிழக விஜயம்


'சின்ன வீடு' தான் ஜாலி!


(இ) காங்கிரஸ்
மூப்பனார்


சீக்கிரம்!
ராஜா முகமது


சகுனம் கெடக்குது. நீங்க என்கூட வாங்க!


மியாவ் மியாவ்
நடராசன்?





**கல்கி**

1988 நவம்பர் 20
மலர் 47 இதழ் 16
விபவ கார்த்திகை 5



# தேர்தல் அரங்கில் மற்றொரு நாடகம்!

அமெரிக்க ஜனாதிபதியாக ஜார்ஜ் புஷ் தேர்ந்தெடுக்கப்பட்டதும் கூறிய முதல் வார்த்தைகள்: ''இந்தத் தேர்தல் காரணமாக அமெரிக்க மக்களிடையே ஏற்பட்டுள்ள பிளவுகளைச் செப்பனிடுவோம்; ரணங்களை ஆற்றுவோம்; ஒற்றுமையை வளர்ப்போம். எனக்கு வோட்டுப் போட்டவர்களுக்கு மட்டும் நான் ஜனாதிபதி அல்ல; அமெரிக்க மக்கள் அனைவருக்கும்தான் என்று வாக்குறுதி அளிக்கிறேன்.''

தோல்வியுற்ற டுகாகிஸ் புஷ்ஷுக்குத் தமது நல்வாழ்த்துக்களைத் தெரிவித்த கையோடு தமது ஆதரவாளர்களை நோக்கிச் சொன்னார்: ''நாட்டின் பிரச்னைகளைச் சந்திக்கப் புதிய ஜனாதிபதியுடன் இணைந்து பாடுபடுவோம்.''

இந்தச் சிறந்த ஜனநாயகப் பண்புகளை எட்டிப் பார்த்துவிட்டு இந்தியா பக்கமாக மீண்டும் கவனத்தைத் திருப்பினால் ஒரு முக்கியமான காலகட்டத்தில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி புதுதில்லியில் கூடியதைக் காண்கிறோம். அங்கே பூட்டா சிங் கூறுகிறார்: ''காங்கிரஸுக்கு எதிராக அணிசேர்கிற எதிர்க்கட்சிகள், இந்தியாவின் ஒற்றுமைக்கும் ஒருமைப்பாட்டுக்கும் தீங்கு விளைவிக்கும் சக்திகளின் கைப்பாவைகள்!'' வசந்த் சாத்தே பிரதமரைக் கையெடுத்துக் கும்பிட்டுச் சொல்கிறார்: ''தயவு செய்து உங்கள் அமைச்சரவையில் யாரையுமே நெ. 2 ஆக்கிவிடாதீர்கள்! நெ. 2. ஆனவர்கள் மூளை குழம்பிப் போகிறார்கள்! நெ.-2 ஆகக் கருதப்பட்ட வி. பி. சிங் ஓர் எடுத்துக்காட்டு!''

இப்படிப்பட்ட உளறல்களுக்குப் பஞ்சமே இல்லையென்பதுடன், எடுக்கப்பட்ட சில முடிவுகளும் உருவாக்கப்பட்ட கோஷங்களும் அசட்டுத்தனமாக உள்ளன. ''ஏழைமையை ஒழிப்போம்'' கோஷத்துடன் இப்போது ''வேலையின்மையை நீக்குவோம்'' என்ற கோஷமும் சேர்ந்து கொள்கிறது. எம். ஜி. ஆரைப் பின்பற்றி நாடளாவிய முறையில் இலவச சத்துணவுத் திட்டத்தை அமுல்படுத்துவது என்றும், வேஷ்டி புடைவைகளை இலவசமாக அளிப்பது என்றும் முடிவெடுக்கப்பட்டுள்ளது. கோஷமெழுப்புவதால் வேலையின்மை ஒழிந்து விடாது என்றும், இலவச உணவு, உடை தருவதால் ஏழைமை ஒழிந்து போகாது என்றும் எந்த அரசியல்வாதியின் மூளையும் உணர்ந்து கொண்டதாகத் தெரியவில்லை. உற்பத்திக்கு உதவாத இனங்களில் அரசு சிக்கனம் காட்டுவதும் தொழில், விவசாய வளர்ச்சி மூலம் வேலை வாய்ப்புப் பெருக அடிப்படைத் தேவைகளைக் கவனிப்பதும்தான் நாடு வளம் பெறவும் மக்கள் சுபிட்சமடையவும் ஒரே வழி.

அபத்தங்களுக்கு மத்தியில் அ. இ. கா. க. கூட்டத்தில் ராஜீவின் உரை அர்த்தமுள்ளதாக அமைந்து ஓரளவு ஆறுதல் அளிக்கிறது. அதிகாரங்கள் பரவலாக்கப்பட வேண்டும் என்பதற்கான வாதங்களைச் சமர்ப்பித்த ராஜீவ், ''புதுதில்லியில் வகுக்கப்படும் திட்டங்கள் நாட்டின் எங்கோ ஒரு மூலையில் உள்ள கிராமத்தின் சூழ்நிலைக்குப் பொருத்தமானதாக இருக்கும் என்று உறுதி கூற முடியாது; திட்டங்கள் திணிக்கப்படுகின்றன; சாதகமான புள்ளி விவரங்கள் தயாரிக்கப்படுகின்றன; எல்லோருக்கும் சந்தோஷம் — ஏழைகளைத் தவிர'' என்றார். ''பணமெல்லாம் எங்கே போகிறது?'' என்று கேட்ட ராஜீவ், தங்களுக்கு ஏற்ற திட்டத்தை வகுத்துக் கொள்ளும் உரிமையையும் அதற்கு ஒதுக்கப்படும் பணத்தைத் தாங்களே செலவிடும் உரிமையையும் கிராமப்புற ஜனநாயக அமைப்புக்களுக்கே வழங்கிவிட வேண்டும் என்றார். இன்னும் கட்சிக்குள் விவாதங்களும் உட்கட்சி ஜனநாயகமும் வளர வேண்டும் என்றும் கூறியுள்ளார். ஜாதி, மத இன அடிப்படையில் சில கட்சிகள் பலம் பெறுவதைக் கவலையுடன் நோக்கிய அ. இ. கா. கமிட்டி, தேர்தல் சீர்திருத்தங்கள் பலவற்றையும் சிபாரிசு செய்துள்ளது. இவை வரவேற்கப்பட வேண்டியவையே.

ஆனால் இவையெல்லாம் தேர்தலை முன்னிட்டுப் பேசப்பட்டனவாகத் தோன்றுகிறதேயொழிய செயல் வடிவம் பெறும் என்று நம்ப முடியவில்லை. மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் தர மறுப்பதும், ஜால்ராக்களுக்கே பதவிகளை நிரந்தரமாக்குவதும், யதேச்சாதிகாரப் போக்கில் நடந்து கொள்வதுமே காங்கிரஸ் தலைமையின் கடந்த காலச் சரித்திரமாக இருந்து வந்திருக்கிறது. எனவே அ. இ. கா. கமிட்டியின் வரவேற்கத்தக்க இப்போதைய சில தீர்மானங்களும், தேர்தல் அரங்கில் நடத்தப்பட்ட மற்றொரு நாடகமாகவே முடிந்து போனால் வியப்பதற்கில்லை.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

உங்கள் குழந்தைக்கு ஊட்டுங்கள் முட்டையின் புரதச் சத்தூட்டத்தை!



# ஃபாரெக்ஸ்®-எக்

## 6 மாதம் முதல்




புதிய ஃபாரெக்ஸ் எக் — இது, உங்கள் குழந்தையின் முழு நிறைவான வளர்ச்சிக்குத் தேவையான புரதச் சத்தைக் கொண்டுள்ளது. இது, நன்கு முன்பே பக்குவப் படுத்தப்பட்டது. ஆகவே இது, குழந்தையின் மென்மை யான வயிற்றின் ஜீரண சக்திக்கு ஏற்றதாகும்.

**ஃபாரெக்ஸ்—சுவையுடன் வளரும் வழி**



இதோ ஃபாரெக்ஸ் வளர்ச்சி வழி: 1. பால் சேர்த்த ஃபாரெக்ஸ் சீரியல் 2. ஃபாரெக்ஸ்-வெஜ் 3. ஃபாரெக்ஸ்-எக்

GX/32/203 TML

# வானத்தின் ரகசியங்களை விண்டுரைக்கும் மாணவர்கள்



வான இயல் கிளப் — ஆரம்ப தினம்.



விண்வெளி ரகசியங்களை விண்டுரைக்கும் கண்காட்சி.



ஹம்பி பயணம்.

முப்பது மாணவர்கள் போல, ஹைதராபாத் எக்ஸ்பிரஸில் பயணம் செய்து கொண்டிருக்கிறார்கள். ஓங்கோலுக்குக் கொஞ்ச தூரம் முன்னால், சிக்னல் கிடைக்காமல், ரயில் நின்று விடுகிறது. வெளியே கும்மிருட்டு. வழக்கமாய் இந்த மாதிரி சூழ்நிலை, பயணிகளுக்குச் சலிப்பையும், எரிச்சலையும்தானே ஏற்படுத்தும்? அதே நிலைதான் ரயிலில் அத்தனை பயணிகளுக்கும்.

ஆனால் இந்த முப்பது மாணவர்கள் நிலை மட்டும் வித்தியாசமானது. "அதோ பார் ஏரீஸ்... இதோ... சப்தரிஷி மண்டலம்..." என்று வான மண்டலத்தை ஆராய்வதில் மூழ்கிவிட்டனர். அரை மணி நேரம் காத்திருந்த அலுப்பு தெரியவேயில்லை. இந்த மாணவர்கள் சென்னை விவேகானந்தா கல்லூரியின் 'அஸ்டிரானமி கிளப்' உறுப்பினர்கள்.

'விவேகா'வின் வான இயல் கிளப் பதினைந்து ஆண்டுகளுக்கும் மேலாகச் செயல்பட்டு வருகிறது. இது, காலம் சென்ற பேராசிரியர் ரங்கனாதராவினால் நிறுவப்பட்டது.

விவேகானந்தா கல்லூரியின் மொட்டை மாடியில் டெலெஸ்கோப் வைத்திருக்கிறார்கள். இரு வாரங்களுக்கு ஒரு முறை, இரவு நேரங்களில், மாணவர்கள் வந்து, வானத்தில் உள்ள பல்வேறு நட்சத்திரங்களைப் பார்த்து மகிழ்வதுடன், அவை பற்றி விவாதிக்கவும் செய்கிறார்கள். ஆர்வமுள்ள பொது மக்களும், இந்த மாணவர்களுடன் சேர்ந்து கொண்டு நட்சத்திரங்களை 'சைட்' அடிக்கலாம்.

**வா**னவெளியில்முக்கியமானசம்பவங்கள் நிகழும்போது இவர்கள் காணத்தவறுவதில்லை. 1975 — இல், 'கோஹ் டெக்' என்று ஒரு வால் நட்சத்திரம் தோன்றியது. ஏழாயிரத்து ஐந்நூறு வருடங்களுக்கு ஒரு தடவைதான் இந்த வால் நட்சத்திரம் தோன்றுமாம். இதனைச் சில ஆயிரம் பேர்கள் பார்க்கவும், அதைப் பற்றி விவரங்கள் அறியவும் வழி செய்தார்கள் அஸ்டிரானமி 'கிளப்' மாணவர்கள்.

1980 — ஆம் ஆண்டு, பிப்ரவரி 16—ஆம் தேதி ஏற்பட்ட முழு சூரிய கிரகணத்தைப் பார்க்கவும், அதுபற்றிய ஆய்வுகளைச் செய்யவும், முடிவெடுத்தார்கள். ஆனால், சென்னையைவிட, கர்நாடக மாநிலத்தில் உள்ள 'கார்வார்' என்கிற இடத்தில்தான் நூறு சதவீத கிரகணம் பார்க்க முடியும் என்று அறிந்து, கார்வார் செல்லத் திட்டமிட்டனர். இதுபற்றிப் பேராசிரியர் ராம கார்த்திகேயன், சொல்கிறார்: தேவையான உபகரணங்களுடன் புறப்பட்டோம். ஆனால், ஹூப்ளியை அடைந்தபின், அங்கிருந்து, கார்வார் செல்லப் போக்குவரத்து வசதி இல்லை. தவிரவும், முழுமையான கிரகணம் கார்வாரில்தான் என்பதால், உலகெங்குமுள்ள வானியல் ஆராய்ச்சியாளர்கள் கார்வாரில் கூடியிருந்தனர். தங்க இடம் கிடைக்குமா என்று சந்தேகமாகி விட்டது. ஸ்டேஷனில் நின்று கொண்டிருந்த போது, உள்ளூர் டாக்டர் ஒருவர் 'என்ன விஷயம்?' என விசாரித்தார். 'விஷயத்தைச் சொன்னதும் மிகுந்த உற்சாகத்துடன் தமது சொந்தப் பொறுப்பில் எங்களுக்கு எல்லா ஏற்பாடுகளும் செய்து தந்தார். இவ்வாறு முன்பின் தெரியாதவர் கூட உதவ முன்வந்த போது எங்கள் பணியைப் பற்றி எங்களுக்கே பெருமிதம் ஏற்பட்டது.''

தமிழ்நாடு அரசு, 81 — ஆம் ஆண்டு நடத்திய சுற்றுலா வர்த்தகப் பொருட்காட்சியில் அனைவரையும் கவர்ந்த ஓர் அம்சம், கல்வித்துறை பெவிலியனில் அமைக்கப்பட்டிருந்த 'மினி — கோளரங்கம்.' இதை வடிவமைத்தவர்கள் விவேகானந்தா கல்லூரியின் வானியல் சங்கத்தினர்தான்.

82 — ஆம் ஆண்டு, உலகப் புகழ்பெற்ற வானியல் நிபுணர் டாக்டர் ஆல்பிரட் ஃபிரெட்மென் சென்னைக்குத் தமது நடமாடும் கோளரங்கத்துடன் வந்தபோது, அவருக்கு உதவியாகச் சென்னை நகரின் பல்வேறு பகுதிகளுக்கும் விவேகா வானியல் சங்கத்தினர் உடன் சென்று மாணவர்களுக்கும், பொதுமக்களுக்கும் விளக்கம் தந்தார்கள். இவர்கள் திறமையைப் பார்த்துவிட்டு, ஃபிரெட்மெனே ஆச்சரியப்பட்டுப் போனார். சென்னைப் பல்கலைக் கழகத்தின் 125 — வது ஆண்டு விழாவையொட்டி, நடந்த கண்காட்சியின் ஒருபகுதியான 'வானியல் கண்காட்சி' நடத்தத் தேர்ந்தெடுக்கப்பட்ட இடம் விவேகானந்தா கல்லூரிதான்.

''86 — ஆம் ஆண்டு, ஹாலிஸ் காமட் தோன்றியது; முதல் நாளிலிருந்து ஹாலிக்கு 'டாடா' சொல்லும் வரை, பல மாணவர்கள் மாறி மாறி டெலெஸ்கோப் முன் அமர்ந்திருந்தார்கள். ஹாலி வால் நட்சத்திரம் பற்றிக் கருத்தரங்கும் நடத்தப்பட்டது'' என்றார் கிளப்பின் துணைச் செயலர் மிருத்யுஞ்சய குமார்.

''சென்னை நகரின் சில பள்ளிகளில், எங்கள் ஒத்துழைப்பு, ஆலோசனையுடன் வானியல் சங்கங்கள் ஆரம்பிக்கப்பட்டுள்ளன; மாணவர்களுக்குக் குவிஸ் நடத்திப் பரிசு தருகிறோம்'' என்று பெருமையுடன் குறிப்பிட்டார் இன்னொரு துணைச் செயலர் கணேஷ்.

''நாங்கள் வானத்தை நோக்கு முன்னர் முதலில் கபாலி கோயில் கோபுரத்தின் 'ஓம்' சின்னத்தை டெலெஸ்கோப்பில் பார்ப்போம்'' என்று மாணவர் அருண் பாஸ்கர் கூறியது, விஞ்ஞானத்தை மட்டுமல்ல, அதன் மெய்ஞானத்தையும் இவர்கள் புரிந்து கொண்டிருப்பதை உணர்த்தியது.

— ஜூலி

**(மாணவர்களே, உங்கள் கல்லூரியில் வித்தியாசமான இதுபோன்ற சிறப்பு அம்சம் ஏதேனும் உள்ளதா? ஒரு கடிதம் போடுங்கள். தேர்ந்தெடுக்கப்படும் கல்லூரிகளுக்கு எங்கள் நிருபர் நேரில் வருவார்.)**

---

**மானேஜர்:** உங்களை சீட்டிலேயே பார்க்க முடியல்லே... எங்கே போறீங்க...? எப்போ வர்றீங்கன்னே தெரியல்லே... உங்களை செக் பண்ணவே ஒரு ஆளைப் போடலாம்...

**ஒரு கிளார்க்:** ரொம்ப சந்தோஷம் சார்... என்னோட மச்சானை நாளைக்கு உங்களை வீட்டில் வந்து பார்க்கச் சொல்றேன்...!

— ராஜிராதா.





**நிருபர்:** சின்னச் சின்ன வேடத்திலே நடித்து வந்த நீங்க, 'ஹீரோ'வா வருவதற்கு எப்படியெல்லாம் கஷ்டப்பட்டீங்க?

**நடிகர்:** கஷ்டப்பட்டு நடிப்பைக் குறைச்சுக்கிட்டேன்! சண்டை போடக் கத்துக்கிட்டேன்! ஹீரோவாயிட்டேன்!

— குத்தாலம் ராஜா.



துப்பறியும்
சூர்யா – கிரண்
நவீன்
பிரதாப்
முல்லிக்




குரானா மன்றாடினார்...
கல்தான்! என்னை விடு தலை செய்!




இப்போது அது சாத்தியமில்லை. உன் உருவத்தை அடைந்துவிட்ட என்னுடைய ஆள், அமெரிக்காவில் உன் இடத்தில் இப்போது இருக்கிறான்.




இதோ பார்!
NEW YORK TIMES
டாக்டர் குரானா அயல் நாடுகளில் சுற்றுப்பய ணம் முடிந்து அமெ ரிக்கா திரும்பினார்...




கல்தான் என்னை விடுவிக்கவில்லை. இதுதான் என் கதை, கிரண்!




அப்போதிருந்து கல்தானை அழிக்க வழி கண்டுபிடிக்கும் முயற்சியில் இறங்கியிருக்கி றேன்.






இப்போது கிரணுக்கு எல்லாம் புரிந்தது.
இந்த விதமாகத்தான் இன் னொரு கல்தானை உரு வாக்கி உலவ விட்டிருக்கி றார்கள். இன்னொரு கிர ணையும் உருவாக்கி னார்கள்!




ஆனால் என்னுடைய ஜீன் கள் அவர்களுக்கு எப்படிக் கிடைத்தன?




ரத்தப் பரிசோதனைக்காக உன் ரத்தத்தை நீ கொடுத்த துண்டா? ஒரு சமயம் பெருந் தலைவர்கள் ரத்த தானம் செய்ய, அங்கிருந்து திரு டியோ, லஞ்சம் கொடுத்தோ கொண்டு வந்து விட் டார்கள்!


(தொடரும்)

## இந்த குடும்பத்திற்கு பிடித்தமான சோ
## எது என்று யூகிக்க முடியுமா?

அப்பா

அம்ம

## சன்ஸார். குடும்பம் முழுவதும் விரும்
## ஒரே குளியல் சோப்.

சன்ஸார் சோப், உலகின் சில முக்கிய
தொழிற்சாலைகளின் ஒன்றான இத்தாலியன் தொழில்
நுட்ப துறையின் மூலம் நவீனமயமாக்கப்பட்ட
தொழிற்சாலையில் தயாரிக்கப்படுகிறது. சுத்தமான மூல
பொருட்களை மட்டுமே கொண்டு தயாரிக்கப்பட்டு
உங்கள் பணத்திற்கு மதிப்பையும், உங்கள் குடும்பத்திற்கு
நாள் முழுவதும் புத்துணர்ச்சியை கொடுக்கிறது.




கர்நாடகா சோப்ஸ் அண்டு டிடர்ஜென்ட்ஸ் லிட்., பெங்களூர் 560 0

# நீரில் மிதக்கும் நிலா

16

"மது, என்ன இது நடுரோட்ல சின்னக் குழந்தை மாதிரி கத்திக்கிட்டு... நான்தான் உன் கையைப்புடிச் சேன்'' என்றான் சந்திரமௌலி.

மதுமதி ஒரு பெருமூச்சு விட்டாள்.

''நான் வாழணுங்கற அவசியமே இல்லை சந்துரு. இருந்தாலும் இந்த உயிர் பயம் நம்மளையும் மீறித் தலைகாட்டிடுது பார்த்தியா?'' என்றாள் கையை அவனிடமிருந்து விடுவித்துக் கொண்டு.

வீடு கடைசியில் திருப்பத்தை ஒட்டியிருந்தது. எதிரே பரந்த மைதானம்; நிறைய தண்ணீர் தேங்கித் தவளைகள் இன்றைய அரசியல் பேசிக் கொண்டிருந்தன.

இரண்டு படிகளேறிக் கதவைத் தட்டினாள் மதுமதி.

"யாரு?''

''நான்தாம்மா'' என்றாள் மதுமதி.

கதவு மெல்லத் திறந்து கையில் லாந்தருடன் ரோகிணி நின்றாள். லாந்தரின் வெளிச்சம் மதுமதியின் முகத்திலும் பின்னால் நின்ற சந்துருவின் முகத்திலும் விழுந்தது.

"வா சந்துரு...''

''சந்துரு வந்திருக்கானா...? வாப்பா!''

உள்ளே நுழைந்ததும் மதுமதி சிரிக்கத் தொடங்கினாள்.

''என்ன ஆச்சு மது?'' என்று கேட்டாள் ரோகிணி.

''திடீர்னு கரண்ட் கட்டாய்டிச்சு. ஒரே இருட்டு. கவலையா உக்காந்துக்கிட்டிருந்தேன் — என்ன ஆகுமோ, ஏது ஆகுமோன்னு... நீ என்னடான்னா உள்ளே நுழைஞ்சதும் நுழையாததுமாச் சிரிக்கறே...''

மதுமதி வீட்டுக்கு வரும் வழியில் சந்துரு கையைப் பற்றியதைச் சொன்னாள். எவனோ குடிகாரன் கத்தியதைச் சொன்னாள். பயந்து அலறியதைச் சொன்னாள்.

''ஒழுங்கா பழைய வீட்டிலேயே இருந்திருக்கலாம். இங்கே தனியா வந்துட்டோம். ஆம்பிளைத்துணையில்லாம நிமிஷத்துக்கு நிமிஷம் நெஞ்சைப் பிடிச்சுக்கிட்டு உக்காந்திருக்க வேண்டியிருக்கு. இருட்டிலே எவனாவது அடாவடித்தனமா உள்ளே நுழைஞ்சாக் கூடத் தட்டிக் கேட்க ஆளு கெடையாது...''

''நான் ஒண்ணு சொன்னாத் தப்பா நெனைச்சிக்க மாட்டியே, மது?'' என்றான் சந்திரமௌலி.

''என்ன சந்துரு?''

''இந்த வீட்ல உங்களுக்குத் தொணையா நான் இங்கேயே இருந்துடறேனே...'' சந்திரமௌலி ஏதோ ரகசியம் பேசுகிறவனைப் போல வெகு கிசுகிசுப்பாகச் சொன்னான். குரலில் தயக்கம்.

''நல்லா யோசிச்சுத்தான் சொல்றியா சந்துரு?'' என்றாள் மதுமதி லேசான ஆச்சரியக் குரலில்.

லாந்தர் வெளிச்சம் அவனுடைய பாதி முகத்திற்கு வெளிச்சம் போட்டுக் காட்டியது.

''எனக்கும் அப்பாவுக்கும் சரிப்பட்டு வரலை மது. புரிஞ்சுக்க மாட்டேங்கறாரு. சரியாப் படிப்பு வராத முண்டம்



சுபா

நானு. எங்க வீட்டுக்குத் தண்டச் சோறு. அதுவுமில்லாம உங்க வீட்டுக்கு அடிக்கடி வர்றதில அவருக்கு ஏகப்பட்ட கோபம். 'நம்ம வீட்டு வேலையைச் செய்ய வக்கில்ல. எதுக்கெடுத்தாலும் அவங்க வீட்டுக்குப் போறியே, அங்கே உனக்கு என்ன கொட்டிக் கெடக்கு'ன்னு பேசறாரு. அவர் பேசறதையெல்லாம் இங்கே நான் சொன்னா, நான் கேவலமாப் போயிடுவேன். இன்னிக்குக் கூடச் சண்டை போட்டுக்கிட்டுத் தான் வெளியே வந்தேன். உங்க வீட்டுக்கு வர்றதாயிருந்தா வீட்டுக்குள்ளே மறுபடி காலை எடுத்து வைக்கக் கூடாதுன்னு சொல்லிட்டாரு. 'நான் மது வீட்டுக்குத் தான் போறேன். திரும்பி வரமாட்டேன்னு சொல்லிட்டுத்தான் வந்திருக்கேன். 'கொஞ்ச நாளைக்கு எனக்கு ஒருவேளை சாப்பாடாவது போட மாட்டியா, மது? நான் ஒரு வேலை தேடிக்கிற வரைக்கும்...?'

"ச்சீ, என்ன சந்துரு இது...? நீ இந்த வீட்டுக்கு வந்தா எங்களுக்கெல்லாம் ரொம்ப சந்தோஷம்தான். ஆம்பிளைத் துணையே இல்லாத வீட்டுக்கு நீ பெரிய பலம் சந்துரு... என்னம்மா சொல்றே நீ?"

''ம்'' என்று முனகினாள் ரோகிணி. மதுமதி சொன்னதை வரவேற்கிற மாதிரியும் இருந்தது. வரவேற்காத மாதிரியும் இருந்தது.

**ம**துமதி இருளுக்குள் வெறித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். அப்பா உட்கார்ந்து எப்போதும் அசைபோடும் சாய்வு நாற்காலி. லேசாக உந்தி விட்டதில் மெலிதாய் அது முன்னும், பின்னுமாய் ஆடியது... அவள் மனத்தைப் போல...

''மது...'' என்று ரோகிணியின் குரல் மிக மெலிதாய்க் கேட்டது. மதுமதி நிமிர்ந்து பார்த்தாள்.

''என்னம்மா...?''

''சந்துரு வந்து ரெண்டு மாசமாச்சி மது...''

''அதனாலே?''

''அவனை இனிமே நம்ம வீட்ல வெச்சுக்க முடியுமான்னு யோசிக்க வேண்டியிருக்கு மது...''

''ஏம்மா?''

''நான் சொல்றதெல்லாம் நீ காதுலயே போட்டுக்கறதில்ல மது. ஒவ்வொரு நாளைக்கு ஒண்ணுன்னு நானும் உங்கிட்டேர்ந்து கட்டிக் கட்டி வச்சி இருந்துட்டுக் கடைசில மனசில மெல்ல முடியாம வெளில சொல்றேன்.''

''வயசுப் பொண்ணுங்க இருக்கிற வீட்ல மூணாவது பையன் ஒருத்தனை வீட்டோட வச்சிக்கறதைப் பத்தி எத்தனை தடவைம்மா பேசறது? ஊர்லதான் நாலு பேர் நாலு விதமாப் பேசுவாங்க. நமக்கென்னம்மா?''

''ஊர்ல இருக்கறவங்கல்லாம் யாரோ. ஆனா நான் அம்மா இல்லியா? எனக்கு மதிப்புக் கொடுக்க வேண்டாம் மது. என் அனுபவத்துக்காவது மதிப்புக் கொடேன்.''

மதுமதி கொஞ்சம் ஆச்சரியத்தோடு அம்மாவைப் பார்த்தாள்.

''அப்படி என்னம்மா நடந்து போச்சு?''

''மீராவும் சந்துருவும் ரொம்ப நெருக்கமாப் பழகறாங்க மது. அவ கண் முழிச்சுப் படிக்கணும்கறதுக்காக இவன் டீ போட்டுத் தர்றான். இவன் டீ போடற போது அவளும் கூடவே சமையல்கட்டுக்குத் தனியாப் போயிடறா... வீட்ல பேசறதெல்லாம் போதாம காலேஜுக்குப் போய் அவளைப் பார்த்துப் பேசறான். ரெண்டு பேரையும் சேர்ந்தா மாதிரிப் பிடிச்சா ரெண்டு பேர் மூஞ்சிலயும் அசட்டுத்தனம் வேற...''

''நீ என்ன சொல்ல வர்றேன்னே புரியலம்மா... நீ சொன்ன விஷயத்தில் எல்லாம் என்ன தப்பு நடந்திருக்குன்னு சொல்றே?''

''தப்பு நடந்துடிச்சின்னு நான் சொல்லலை மது. கல்யாண ஆசை மீராவுக்கு வந்திருச்சோ என்னவோன்னு நெனைக்கறேன்.''

''மீராவுக்கு இப்ப கல்யாணம் பண்ணிடலாங்கறியாம்மா?''

''என் மொதப் பொண்ணுதான் ஒண்ணுமே வேண்டாம்னு சொல்லிட்டா. அடுத்ததுக்காவது ஏதாவது நல்லது நடக்க வேண்டாமா? என்ன இருந்தாலும் நான் அம்மா. நீ அக்கா. என்னைவிட உன்னால மீராகிட்டே சகஜமாப் பேச முடியும். அவ மனசிலே இருக்கிறதைத் தெரிஞ்சுக்கிட்டேன்னா நல்லா இருக்கும்.

''செஞ்சிடலாம்மா. என்ன இருந்தாலும் நீ அம்மா. உனக்குத் தெரியற அளவுக்கு எனக்குத் தெரிய நியாயம் இல்லேதான்'' என்றாள் மதுமதி நாற்காலியில் இருந்து எழுந்து கொண்டு.

**சா**ந்தி மண்டபம்.

ஒதுக்குப்புறமாயிருந்த இடங்களில்



ஜோடி ஜோடியாய் உட்கார்ந்திருந்தார்கள். லேசாய்க் கைகளைக் கோத்துக் கொண்டு. தோளில் சாய்ந்து கொண்டு. மடியில் தலையைக் கவிழ்த்துக் கொண்டு. மூதுகோடு முதுகாய் இழைத்துக் கொண்டு.

மீரா மதுமதியுடன் நடக்கும் போது மெல்ல மெல்லத் திரும்பி அந்த ஜோடிகளை ஓரக்கண்ணால்பார்த்துக்கொண்டே நடந்தாள். சந்துரு இரண்டு பேருக்கும் முன்னால் நடந்து கொண்டிருந்தான். ஒரு வாண்டுப் பட்டாளம் அவர்களைச் சுற்றிக் கொண்டு நீளரயிலாய் ஓடியது.

மதுமதி நிழலாக இருந்த ஓர் இடத்தில் உட்கார்ந்தாள்.

''நாம மூணு பேரும் ஒண்ணா இந்த இடத்துக்கு ஏன் வந்திருக்கோம் தெரியுமா சந்துரு?''

''நீ கூப்பிட்டே, நாங்க வந்துட்டோம். அவ்வளவுதான்.''

''சரி, நான் இப்ப கேள்வி கேக்கப் போறேன். பதில் சொல்வீங்களா?''

''ம்'' என்றார்கள் இரண்டு பேரும்.

''சந்துரு ஃபர்ஸ்ட். உன் வாழ்க்கைக் குறிக்கோள் என்ன சந்துரு?''

''மது குடும்பத்துக்குப் பாரமா இருக்கிறது.

''ஃபூல்,'' என்றாள் மதுமதி. ''கரெக்டாச் சொல்லு.''

''மது குடும்பத்தில ஒருத்தரா இருக்கிறது.''

''உனக்கு மீரா?

''என்ன?''

''உன் லைஃப் ஆம்பிஷன்?''

''ஒரு கணவனுக்கு மனைவியாறது.''

''அப்புறம்?''

''அவ்வளவுதான். வாழ்க்கையில எல்லாரும் கடைசியில எதைச் சாதிக்கறாங்க? ஆம்பிளையாயிருந்தா ஒரு பொம்பளைகிட்ட அடிபணியணும். பொம்பளையாயிருந்தா ஒரு ஆம்பளைகிட்ட அடிபணியணும். விட்டுக் கொடுக்கறதும், சண்டை போடறதுமா அது ஒரு தனி உலகம். இல்லையா மதுக்கா... உனக்குத்தான் அதைப் பத்தி நிறையத் தெரிஞ்சிருக்குமே...?''

''சொல்றதைப் பார்த்தா ஏற்கெனவே ஆளை செலக்ட் பண்ணிட்ட மாதிரி இருக்கு?''

''அப்படியெல்லாம் ஒண்ணுமில்ல மதுக்கா.''

''நேரடியாக் கேக்கறேன் ஒரு கேள்வி. நீயும், சந்துருவும் லவ் பண்றீங்களா?''

திடீரென ஒரு மௌனம் வந்து சூழ்ந்து கொண்டது. தூரத்தில் தன் கூண்டில் ஒரு மிருகம் தாராளமாகச் சத்தம் போட்டது. மேல் கிளையிலிருந்து ஒரு காகம் படபட வென்று அடித்துக் கொண்டு பறந்தது.

'ஹை கரடி' என்று நூறடி தூரத்துக் குரல் துல்லியமாய்க் காதில் விழுந்தது.

''நான் கேட்டதுக்குப் பதிலே காணோம்?''

''என்னக்கா திடீர்னு இந்த மாதிரி ஒரு கேள்வி?''

''எப்பவோ முளைச்ச கேள்வி. இப்பத்தான் உங்ககிட்டே கேக்கறேன். பதில் சொல்லுங்க. ரெண்டு பேரும் லவ் பண்றீங்களா?''

''ம்'' என்று முனகும் குரலில் சொன்னான் சந்துரு. மீரா பதில் சொல்லாமல் தலையைக் குனிந்து கொண்டாள்.

''ஜமாய்ச்சிடலாம்... எழுந்திருங்க...'' என்றாள் மதுமதி, எழுந்து கொண்டே.

**பி**ருத்விராஜ் கதை சொல்வதை நிறுத்திவிட்டான். காரணம் எதிரில் இருந்த ஷில்பா. அவள் கை பிருத்விராஜின் கையைப் பற்றி இருந்தது. நெரித்துக் கொண்டிருந்தது. கண்களில் நீர்ப் படலம்.

பிருத்விராஜ் ஷில்பாவின் கையை மெல்லத் தட்டினான்.

''என்ன ஷில்பா இது?''

''உங்க மது கடைசி வரைக்கும் இந்த மாதிரி குடும்பத்துக்காகவே வாழப் போறாளா பிருத்வி?''

''போகப் போகப் பாரேன்.''

''மதுவுக்கும் ஒரு தங்கச்சி. எனக்கும் ஒரு தங்கச்சி. நீங்க மீராவைப் பத்தி சொல்றப்பல்லாம் எனக்குத் திலகா ஞாபகம் வருது. அது தறிகெட்டுப் போய்டுமோன்னு தோணுது. மது, மீராவுக்குக் கல்யாணம் செய்து வைக்கணும்னு நெனைச்சா பாருங்க. ரொம்ப புத்திசாலித்தனமான காரியம். நானும் உங்க மது மாதிரி ஃபீல் பண்றேன் பிருத்வி. என்னவோ நானே மீராகிட்ட லவ் பண்றியான்னு கேக்கற மாதிரி நெனைச்சுக்கிட்டு உங்க கையைப் பிடிச்சிட்டேன்...''

''அதனாலே என்ன?'' என்றான் பிருத்விராஜ். அவள் தொட்ட இடம் இன்னமும் குளுமையாய் இருந்தது.

''பிருத்வி, நான் ஒண்ணு சொல்லட்டுமா?''

''பர்மிஷன் எதுக்கு ஷில்பா?''

''எனக்கு எங்கக்காவைத் தவிர வீட்ல வேறே யார்கூடேயும் ஒட்ட முடியலே பிருத்வி...?''

''இதான் நீ சொல்ல வந்ததா?''.

''அப்பா எந்த நேரத்திலேயும் என்னை வெள்ளத்திலே தள்ளி விட்டுடுவாரோன்னு ஒரு பயம் இருந்துக்கிட்டேயிருக்கு.''

''சேச்சே!''

''செட்ல நான் இருக்கறப்ப, நீங்க அதே செட்ல ஏதாவது ஒரு மூலையில இருந்தாலும் போதும், எனக்கு ரொம்பப் பாதுகாப்பா இருக்கிற மாதிரி நெனைக்கறேன்! ஏன் தெரியுமா?''

''ஏன் ஷில்பா?''

''நான் உங்க மது. ஷில்பா இல்லே, மது. மதுமேல ஒரு தூசியும் படாம நீங்க பாத்துக்குவீங்க. உங்க மதுவைச் சுத்தித் தனியா ஒரு கோட்டையே எழுப்புவீங்க. இல்லை பிருத்வி?''

''ஷில்பா...'' என்றான் பிருத்விராஜ். ஆச்சரியமாக, சந்தோஷமாக...

''அதனாலேயே எனக்கு உங்க மேல ஒரு... ஒரு...''

''ஷில்பா...''

''ஐ லவ் யூ பிருத்வி!''

(தொடரும்)

---

*அமைச்சர்:* அரசே! ஏமநாட்டு மன்னன் நாமதேவன் தங்களுக்கு எச்சரிக்கை ஓலை அனுப்பியிருக்கிறான்!

*அரசர்:* என்னவென்று?

*அமைச்சர்:* அவர் மகளைத் தாங்கள் திருமணம் செய்து கொள்ள வேண்டுமாம். மறுத்தால்... போர்க்களத்தில் சந்திப்பாராம்! தங்கள் முடிவு...?

*அரசர்:* போர்க்களமே தேவலாம் அமைச்சரே!

— செவல்குளம் 'ஆச்சா'

# வேலையை மறுக்கும் நாணயங்கள்

லலிதானந்தன்

**ப**ழனியப்பனுக்கு எரிச்சலாக வந்தது. ஒரு நாற்பது மில்லி மீட்டர் ராடை டர்ன் பண்றதுக்கு இவ்வளவு நேரமா!? அதுவும் பக்கத்தில் நின்று கையால் 'கட்' கொடுக்காமல், 'ஆட்டோ'வில் போட்டு விட்டு உட்கார்ந்திருந்த துரையைப் பார்த்த போது எரிச்சல் இன்னும் அதிகமாகியது. அவருடைய எரிச்சலை மேலும் அதிகமாக்கும் வகையில், அவன் 'லேத்'ஐ நிறுத்தி விட்டு அடுத்த மெஷினில் வேலை செய்து கொண்டிருந்த நல்லுசாமியிடம் பேசப் போன போது தன் சீட்டிற்கு வருமாறு அவனை அழைத்தார் பழனியப்பன். கூப்பிட்டு ஐந்து நிமிடங்கள் கழித்து வந்து நின்ற துரையை நேருக்கு நேர் பார்த்தார். பழனியப்பனின் பார்வையைத் தவிர்க்க வேறு பக்கம் பார்த்தான் துரை.

''எட்டு மணி நேர ஷிஃப்டுல ரெண்டு மணி நேரம் 'டீ'க்கும் சாப்பாட்டுக்கும் எடுத்துக்கறீங்க. மிச்சம் ஆறு மணி நேரமாவது வேலையைப் பாருங்க துரை!''

''பார்த்துக்கிட்டுத்தான் சார் இருக்கேன்.''

''என்னத்தைப் பாக்கறீங்க! நீங்க ஒரு எக்ஸ்பீரியன்ஸ்டு டர்னர்தானே? அந்த 'ராடை' அவ்வளவு மெதுவா வாங்க டர்ன் பண்றது?''

''அதப் பத்தியெல்லாம் பேசாதீங்க சார்! உங்க வேலை, வேலை கொடுக்கறது; என்னோட வேலை, அதைச் செய்யறது. என்ன ஸ்பீடுல போடணும், எப்படிப் போடணும்னு எனக்குத் தெரியும். ஷிஃப்டு முடியும் போது 'அவுட்புட்' வரலைன்னா கேளுங்க'' என்றான் துரை.

''இந்தப் பேச்செல்லாம் பேசாதீங்க. உங்களுக்கு வேலையைக் கொடுத்துட்டுக் கல்லு மாதிரி ஒண்ணுமே கண்டுக்காம இருக்கறதுக்காக நான் இங்க சூப்பர்வைசரா வரல்லை. நீங்க வேலையும் செய்யாம, அடுத்த ஆபரேட்டரைப் போய் வேலை செய்ய விடாம டிஸ்டர்ப் பண்ணுவீங்க, நான் பார்த்துக்கிட்டுச் சும்மா இருக்கணுமாக்கும்!''

''சார் ஒரு ரெண்டு நிமிஷம் பக்கத்துல போய்ப் பேசினதுக்கு இப்படி சலிச்சிக்கறீங்களே, ஒரு மனுசனால எட்டு மணி நேரமும் தொடர்ந்து வேலை செய்ய முடியாது சார்.''

''எதுங்க ரெண்டு நிமிஷம்! இது வரைக்கும் 'ஷிப்ட்' ஆரம்பிச்சு எத்தனை முறை இப்படி அடுத்தவங்ககிட்டே பேசிக்கிட்டு இருந்திருக்கீங்க தெரியுமா?'' பழனி சற்றுக் குரலை உயர்த்திப் பேசியதும் பக்கத்தில் உட்கார்ந்திருந்த சூப்பர்வைசர்களும், கேபினுக்கு வெளியே இருந்த மற்ற தொழிலாளர்களும் இவர்களைக் கவனிப்பதில் ஆர்வமானார்கள்.

''சார் நமக்குள்ளே, வீணா ஏன் சார் பேச்சு. நான் இப்படித்தான் இருப்பேன், உங்க இஷ்டப் பிரகாரம் அடிமை மாதிரி வேலை பார்க்கிறதுக்கு இது ஒண்ணும் தனியார் நிறுவனம் இல்லை. இது கவர்ன்மெண்ட் பேக்டரி. இதுல எல்லார்க்கும் சம உரிமை உண்டு. நீங்க வேணும்னா மேலே சொல்லி என்ன செய்யணுமோ செஞ்சுக்குங்க!''

''அது எனக்குத் தெரியுங்க, மேலே ரிப்போர்ட் பண்ணினா, உங்களுக்குப் பாதிப்பு ஏற்படுமேன்னு ஒரு நல்ல எண்ணத்தோடு தான் இத்தனை நாளா கம்மாயிருந்தேன்...'' என்று சொன்ன பழனியப்பனை இடைமறித்தான் துரை.

''அந்த மாதிரி நல்ல எண்ணமெல்லாம் எம்மேல உங்களுக்கு வேணாம் சார், உங்களால என்ன செய்ய முடியுமோ செய்யுங்க. அதை எப்படி சந்திக்கிறதுன்னு எனக்குத் தெரியும்'' என்று சொல்லி விட்டு விருட்டென்று வெளியே போனான்.





பழனியப்பன் உள்ளுக்குள்ளேயே கொதித்தார், சீறினார், தன் இருபது வருட சர்வீஸில் யாரும் அவரிடம் இப்படிப் பேசிய தில்லை.

''சார், ஒரு பிராப்ளம்!'' என்று சொன்ன பழனியப்பனை, ஃபைலில் இருந்து கண்களை நிமிர்த்திப் பார்த்து ''சொல்லுங்க'' என்றபடி அடையாளமிட்டு ஃபைலை மூடி வைத்தார், என்ஜினியர் நாராயணன்.

''வர வர இந்த துரையோட போக்கு ரொம்ப மோசமாப் போய்க்கிட்டே இருக்கு சார்.''

''யாரு? வெளியூரில இருந்து எ. பி. ஸி. ஷிஃப்டிற்கு வரக் கஷ்டமா இருக்குன்னு சொன்னதால, போன மாசத்துல இருந்து எட்டு நாலரை ஷிஃப்ட் கொடுத்தோமே அந்த டர்னர் துரையா?''



சலூன்காரர்: என்னது? முடி வெட்டிக்கிட்டதுக்கு, 'சர்ட்டிபிகேட்' வேணுமா ...?

இளைஞன்: ஆமா. அப்போதான் என் அப்பா நம்புவார்!

— ஆர். வசந்தகுமார்.

''ஆமாம் சார், அவரு கஷ்டப்படறாரேன்னு நல்லது செய்தும், கம்பெனிக்கு அவராலே ஒரு பிரயோஜனமும் இல்ல சார்...''

பழனியப்பன் சற்று முன் நடந்ததையும், கடைசியில் ''உங்களால் என்ன பண்ண முடியுமோ பண்ணுங்க'' என்று துரை சவாலாகச் சொன்னதையும் சுருக்கமாகச் சொன்னார்.

சிறிது நேரம் மௌனமாக இருந்தார் நாராயணன். அவர் பார்வை ஏதோ சூனியத்தை நோக்கி இருந்தது. தம் மனத்திற்குள்ளேயே சில கேள்விகளையும் பதில்களையும் போட்டுப் பார்த்தார். கடைசியாக,

''அந்தத் துரையைப் பத்தி நீங்க சொல்றதுக்கு முன்னாலேயே, வேறு வழியா எனக்கு 'இன்பர்மேஷன்' வந்திருக்கு. இன்பேக்ட்' அவருக்கு ஜெனரல் ஷிப்ட் அதாவது எட்டு — நாலரை ஷிப்ட் தரணும்னு மேனேஜர் சொன்னப்பவே நான் அவரோட 'ஆக்டிவிடீஸ்' சரியா இல்லைன்னு சொன்னேன். ஆனால் துரை இருக்கிற யூனியன் ரொம்ப வலுவா இருக்கிறதால வீணா ஒரு பிரச்னையை உருவாக்க மேனேஜர் விரும்பலே. அதனாலதான் யூனியன் ஆளுங்க கேட்டுக்கிட்ட மாதிரியே அந்த ஆளுக்கு 'ஜெனரல் ஷிப்ட்' கொடுக்கச் சொன்னார். அதனாலே இப்ப மேனேஜரையும் கலந்து பேசி ஒரு முடிவு எடுப்போம் வாங்க'' என்றார்.

திறந்த கதவு மீண்டும் தானே மூடிக் கொள்ள, அந்த சத்தம் கேட்டு நிமிர்ந்த மேனேஜர் சிவராமனைப் பார்த்து, ''குட் மார்னிங் சார்!'' என்றார் நாராயணன். அவர் பின்னே வந்து நின்ற பழனியப்பனும் சைகையாலேயே 'குட்மார்னிங்' சொன்னார்.

''என்ன? சீனியரும், ஜூனியரும் ஒண்ணா வர்றீங்க, இருமுனைத்தாக்குதலா?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டார் சிவராமன்.

''அதெல்லாம் ஒண்ணுமில்லை சார், ஒரு முனையில தாக்கறதையே எங்களால தாங்க முடியல்லே, நாங்க போய் உங்களை எங்க இரு முனையில தாக்கப் போறோம்'' என்று சொன்ன நாராயணன், வந்த விஷயம் பற்றியும் துரையின் மோசமான செயல்களைப் பற்றியும், பழனியப்பனின் வருத்தத்தையும் தொகுத்துச் சொன்னார்.

நாராயணன் சொல்வதையே கூர்ந்து கவனித்த மேனேஜர் சிவராமன், இடையில் வந்த ஃபோனிற்காக ரிசிவரை எடுத்துப் பேசி விட்டு, மீண்டும் வைத்தார். தம் 'டை'—ஐச் சரி செய்த வண்ணம்,

''ஜி.எம். மீட்டிங்கிற்காகக் கூப்பிடுறாங்க. இன்னிக்கு ஜாயின்ட் கமிட்டி—ஐப் பற்றி 'பிரீஃப்பிங்' இருக்கு. நான் அதுக்குப் போகணும் அதனாலே இந்த விஷயத்தை எப்படி 'டீல்' பண்றதுன்னு நீங்களே சொல்லுங்க நாராயணன்'' என்றவர்,

''வேணும்னா ஒரு மெமோ அடிச்சு அந்த துரைக்குக் குடுக்கறீங்களா?'' என்றார்.

''மெமோ எல்லாம் வேண்டாம் சார். அதைக் கொடுத்தா அந்த ஆளு வாங்க மாட்டேன்னு சொல்லுவான். அப்புறம் அவருகிட்ட நாம போய் வாங்கிக்கங்கன்னு வற்புறுத்தணும். அதனால நாம அந்த ஆளுகிட்டப் போகாமே, அவரு நம்மகிட்டே ஓடி வர்ற மாதிரி ஏதாவது செய்யணும் சார்!'' என்றார் நாராயணன்.

சிறிது நேரம் யோசித்த சிவராமன், ''அப்ப ஒண்ணு பண்ணுங்க. அவரு வசதிக்காகப் போன மாசத்துல இருந்து ஜெனரல் ஷிஃப்ட் குடுத்துருக்கு இல்லையா, அதை மாற்றி உடனே அவரை எ. பி. ஸி. ஷிஃப்ட்ல போடுங்க, கொஞ்சம் கஷ்டப்பட்டா மனுஷன் தானே வழிக்கு வருவான்'' என்றார்.

**து**ரைக்கு அடுத்த திங்கட் கிழமை முதல் எ. பி. ஸி. ஷிஃப்ட் போட்டு நோட்டீஸ் போர்ட்டில் ஒட்டியாகி விட்டது. சுமார் அறுபது கிலோ மீட்டர் தொலைவில் இருந்து தினமும் வேலைக்கு வரும் துரைக்கு, இது நிச்சயம் சிரமத்தைத் தருவதுதான். அன்று டீ இடைவேளையின் போது டீ வாங்கிக் கொண்டு வந்த தொழிலாளர்கள் அனைவரும் கேபினுக்கு வெளியே இருந்த நோட்டீஸ் போர்டை சூழ்ந்து கொண்டு, துரையின் நிலைமைக்காக வருத்தத்துடன் பேசிக் கொண்டிருந்தனர். துரை சிகரட்டை அனாயசமாகப் புகைத்தவாறே அவர்களிடம் சொன்னான்:

''டேய் என்ன பாக்கறீங்க, எனக்கு ஷிஃப்ட் போட்டிருக்கேன்னா...? அதெல்லாம் டைப்பிங் மிஸ்டேக்டா. அடுத்த வாரம் பாரு, எல்லாம் மறுபடியும் பழைய மாதிரி மாறிடும், இவனுங்களாலே என்னை ஒண்ணும் பண்ண முடியாதுடா'' என்று சத்தமாகப் பேசினான். தான் சொல்வது உள்ளே உட்கார்ந்திருக்கும் பழனியப்பனுக்குக் கேட்கிறது என்று உறுதி செய்து கொண்டான்.

உள்ளே உட்கார்ந்திருந்த பழனியப்பனுக்கு இந்த வார்த்தைகள் கோபத்தை மூட்டினாலும், ஒருவாறு சமாளித்துக் கொண்டு மௌனமாகவே இருந்தார். இப்போது ஏதாவது பேசினால் அது வீணான தகராறில் தான் முடியும்.

**எ**திர்பார்த்த அந்த திங்கட் கிழமை, துரை ஆறு மணிக்கு வேலைக்கு வர வேண்டும். ஆனால் வரவில்லை. பழனியப்பனுக்கு ஒன்றும் புரியவில்லை. ஒருவேளை லீவ் போட்டு விட்டானோ....

எட்டு மணிக்கு வழக்கமாக வருவது போல் வந்த துரை 'லேத்' அருகில் சென்று நின்றான். பழனியப்பன் அவனைத் தன்னிடத்திற்கு அழைத்தார்.

''இன்னைக்கு உங்களுக்கு ஆறு—இரண்டு ஷிஃப்ட்தான். எட்டு மணிக்கு உங்க வசதி போல வந்தால், உங்களுக்கு நான் வேலை கொடுக்க முடியாது.''

''சனிக்கிழமை சாயந்திரம் என்ஜினியர் கிட்டே பேசியிருக்கு. நீங்க அவருக்கு ஃபோன் பண்ணிப் பேசிட்டு, எங்கிட்டே பேசினா நல்லது'' என்ற துரையின் வார்த்தைகளில் ஏளனம் நிறைந்திருந்தது.

கோபமாகத் துரையைப் பார்த்து விட்டு, தன் மேசை மீதிருந்த ஃபோனைச் சுழற்றி என்ஜினியரைப் பிடித்தார் பழனியப்பன்.

''சனிக்கிழமை மத்தியானம் யூனியன் ஆளுங்களோட மீட்டிங் நடந்தது. அன்னிக்கு நேரமாகிட்டதாலே மீட்டிங் இப்ப தொடர்ந்து நடக்குது. அதனாலே இன்னைக்கு ஒரு நாளைக்கு அவரை 'அல்லவ்' பண்ணுங்க, மற்றதை நான் அப்புறம் சொல்றேன்'' என்று கூறிவிட்டு, மேற்கொண்டு பேச்சை வளர்க்க விரும்பாத நாராயணன் ஃபோனை வைத்து விட்டார்.

ஏமாற்றத்தாலும், அவமானத்தாலும் மனம் வெதும்பிய பழனியப்பன், தலை குனிந்தவாறே துரையிடம் ''போய் வேலையைப் பாருங்க!'' என்றார்.

**நே**ரம் மதியம் இரண்டு மணியை நெருங்கிக் கொண்டிருந்தது. துரை மற்ற தொழிலாளர்களுக்கிடையில் கதாநாயகனாக ஆகியிருந்தான். அந்த நிலையில் அங்கிருக்கப்பிடிக்காத பழனியப்பன், எழுந்து என்ஜினியரிடம் சென்றார்.

அப்போதுதான் மேனேஜர் அறையில் இருந்து வெளியே வந்த நாராயணன், பழனியப்பனைப் பார்த்ததும்,

''வாங்க உங்களைத்தான் பாக்கணும்னு வந்தேன்'' என்றார்.

''என்ன சார்? மீட்டிங்ல என் முடிவாச்சு?''—பழனியப்பன் ஆவலுடன் கேட்டார்.



எதிரொலி உதவியாளர்: போன வாரம் ஒளிபரப்பான நாடகத்தைப் பாராட்டி நிறையக் கடிதங்கள்...

எதிரொலி நடத்துனர்: யார், யார் எழுதியிருக்காங்க?

உதவியாளர்: நாடகாசிரியரோட அம்மா, அப்பா, சித்தி, சித்தப்பா, பெரியப்பா, பெரியம்மா, மாமா, மாமி......

— ஏ. குமார்.

''துரையை வழக்கம் போல் ஜெனரல் ஷிஃப்ட்லேயே போடுங்க, அவன் விஷயங்களிலே கொஞ்ச நாளைக்கு அனாவசியமா தலையிடாதீங்க'' என்றவரை இடைமறித்து, ஏதோ சொல்ல வந்தார் பழனியப்பன். அவரைத் தடுத்து, ''தயவு செய்து நான் சொல்றதைச் செய்யுங்க, மேற்கொண்டு விவாதம் வேண்டாம். அதனால இப்போதிக்கு ஒண்ணும் பிரயோஜனம் இல்லை'' என்று சொல்லி விட்டுத் தம் இருக்கைக்குச் சென்றார் நாராயணன்.

பழனியப்பன் முகத்தில் ஏமாற்றத்தின் பிரதிபலிப்பு பளிச்சிட்டது. மனத்தில் 'விரக்தி மெல்ல காலூன்றியது.

''இந்த கம்பெனி உருப்படாது. சூப்பர்வைசரை மதிக்காத ஒரு தொழிலாளியைச் சரி செய்ய முடியாத இவங்க என்னத்தக் கிழிக்கப் போறாங்க?, எனக்கு மட்டும் என்ன வந்தது. யாரும் எக்கேடும் கெட்டுப்



''உங்க ஆபீஸுக்கு லஞ்ச ஒழிப்பு அதிகாரிகள் திடீர்னு வந்தாங்களாமே! என்னாச்சு...?''

''அவங்களே, வாங்கறதுக்காகத்தான் வந்தாங்களாம்...!''

— வி. சுந்தரராமன்.

போகட்டும்!' — மனத்துக்குள்ளேயே பேசியவாறு கேபினுக்குச் சென்றார் பழனியப்பன்.

அடுத்து வந்த நாட்களில் தம் வேலையில் ஓர் ஈடுபாடு இல்லாமல், ஏதோ கடமைக்காகச் செய்தார் பழனியப்பன். நடந்து போன நிகழ்ச்சிகள் அவரை மிகவும் மாற்றியிருந்தன.

**அ**ன்று வேகமாக கேபினுக்குள் நுழைந்த நாராயணன் ஏதோ யோசனையில் அமர்ந்திருந்த பழனியப்பனிடம்,

''போன வாரம் கொடுத்த 'மோட்டார் பிளான்ச்' எல்லாம் இன்னும் ரெடியாகவில்லையாமே, ஏன் என்ன பிராப்ளம்?'' என்றார்.

''அதுக்கு முப்பத்தாறு மில்லி மீட்டர் ப்ளேட் வேணும் சார். அது ரா மெடீரியல் ஸ்டோர்ல இருந்து இங்க வரல்லை'' — அமைதியாகப் பதிலளித்தார் பழனியப்பன்.

''வரலேன்னு சொன்னா எப்படி? நீங்க ஸ்டோர்ஸுக்குப் போய்ப் பாத்தீங்களா?'' நாராயணன் பழனியப்பன் மீது குற்றம் சாட்டுவது போலச் சொன்னார்.

''அது என் வேலை கிடையாது சார். இதுக்கு முன்னாடி செஞ்சேன்னா, அது ஓர் ஈடுபாடு காரணமாத்தான். அந்த அளவிற்கு இங்கே எனக்கு யாரும் முக்கியத்துவமோ, மதிப்போ தர்ற மாதிரி தெரியல்லே. அதனாலே இனிமே என்னோட வேலையைப் பத்தி மட்டும் எங்கிட்டே பேசுங்க சார்.''

பழனியப்பனின் பதில் அவர் மனத்தில் ஏற்பட்டிருந்த புண்ணின் வலியை உணர்த்தியது நாராயணனுக்கு. தன் கையில் இருந்த காகிதங்களை மேசை மேல் வைத்து விட்டு, ஒரு நாற்காலியை இழுத்து, பழனியப்பன் அருகில் போட்டுக் கொண்டு உட்கார்ந்தார்.

''நான் சொல்றதக் கொஞ்சம் பொறுமையாக் கேளுங்க பழனி. துரையோட விஷயம் உங்க மனசுல பாதிப்பை ஏற்படுத்தியிருக்குங்கறதை என்னால புரிஞ்சிக்க முடியுது. அன்னைக்கு மீட்டிங்குல நடந்த எல்லாத்தையும் உங்ககிட்டே நான் சொல்ல முடியலை. இப்ப ஓரளவு சொல்றேன். கம்பெனியோட உற்பத்தி இப்ப ரொம்ப மோசமாயிருக்குன்னு எல்லாருக்கும் தெரியும். இதே நிலைமையிலே போச்சுன்னா இந்த வருஷத்துக்கான நம்ம குறியீட்டுல பாதியைக் கூட நாம் முடிக்க முடியாது. ஏற்கெனவே நம்ம நிர்வாகத்தப் பத்தி சட்டசபைல குறை கூறிப் பேசியிருக்காங்க. அதனாலே இந்த சமயத்துல துரையின் விஷயமாகவோ வேறு காரணமாகவோ யூனியனைப் பகைச்சுக்க விரும்பல. அப்படி பகைச்சிக்கிட்டா 'ஸ்ட்ரைக்' வரைக்கும் கூடப் போகலாம். அதனால இந்த வருஷத்துக் குறியீட்டை முடிக்கிற வரைக்குமாவது இந்த மாதிரி பிரச்னைகளிலே கொஞ்சம் விட்டுக் கொடுக்கத்தான் வேண்டியிருக்கு. ஒரு நாட்டுக்காக ஒரு ஊரும், ஒரு ஊருக்காக ஒரு வீடும் நாசமாகலாம்னு பெரியவங்க சொல்லுவாங்க. அப்படித்தான் இதுவும்.''

''இந்த உதாரணம் சொல்ற உங்களுக்கு ஏன் சார் 'ஒரு குடம் பால்ல ஒரு துளி விஷம்'ங்கிற உதாரணம் தெரிய மாட்டேங்குது. இன்னைக்குத் துரையை இப்படியே விட்டா, நாளைக்கு யாருமே சூப்ரவைசருடைய வார்த்தைக்கு மதிப்பு கொடுக்க மாட்டாங்க.''

''அவங்க மதிப்பு கொடுக்கிறதினால நாம உயர்ந்துடப் போறதில்லை. கொடுக்காததனால தாழ்ந்து போயிடப் போறதும் இல்லே... அவங்களைச் சரி செய்யறது தப்புன்னு நான் சொல்ல வரல்ல. அதுக்கு நேரம் இது இல்ல. இப்போ கொஞ்சம் வளைஞ்சு கொடுத்திருக்கறோம். வளைஞ்சு கொடுக்கிறது தோத்துட்டதாக அர்த்தம் ஆகாது. தோத்துட்டதா நினைச்சு நமக்கு நாமே விரக்தி அடையறது ரொம்பத் தப்பு. இப்போ நீங்க வேலையைச் சரியா செய்யாததினால, எனக்கோ அவருக்கோ அல்லது உங்களுக்கோ நஷ்டம் ஒண்ணுமில்ல. நஷ்டம் நம்ம கம்பெனிக்குத்தான். இன்னைக்கு நமக்குச் சமூகத்துல ஓர் அந்தஸ்தும், கௌரவமும், மதிப்பும் இருக்குதுன்னா அது இந்த கம்பெனியாலத்தான். அப்படிப்பட்ட கம்பெனிக்கு, நமக்குள்ள இருக்கிற மனத்தாங்கல்னால நஷ்டத்தை ஏற்படுத்தக் கூடாது. தொழிலாளர்களை விடச் சூப்பர்வைசர்களான உங்களுக்கும், என்ஜினியர்களான எங்களுக்கும், இந்த கம்பெனியோட நலத்துல அக்கறை அதிகமா இருக்கணும். அதனாலதான் நமக்குச் சம்பளம் அதிகமாத் தர்றாங்க. அதனால உங்க மனசில இருக்கிற விரக்தியைத் துடைச்சிட்டு, தயவு செய்து முன்ன இருந்த மாதிரியே வேலையைச் செய்யுங்க.''

தன் நீண்ட உரையை முடித்துக் கொண்டு பழனியப்பனின் முகத்தைப் பார்த்தார் நாராயணன்.

அவர் சொன்னதில் ஏதோ ஓர் உண்மை பளிச்சிட மெல்ல எழுந்து 'ரா மெடீரியல் ஸ்டோர்ஸ்'ஸை நோக்கி நடந்தார் பழனியப்பன்.

# பொன்னியின் செல்வன்

## அத்தியாயம் 2
## பாட்டனும் பேரனும்

பின்னால் ரதத்தில் வந்த கிழவர் சமிக்ஞை செய்யவே, ஆதித்த கரிகாலன் குதிரையைத் திருப்பிக் கொண்டு அவர் வீற்றிருந்த ரதத்தின் அருகில் சென்றான்.

"குழந்தாய்! கரிகாலா! நான் இவ்விடத்தில் உங்களிடம் விடைபெற்றுக் கொண்டு திருக்கோவலூர் போக எண்ணுகிறேன். போவதற்கு முன்னால் உன்னிடம் சில முக்கிய விஷயங்கள் சொல்ல வேண்டும். சற்றுக் குதிரையிலிருந்து இறங்கி அந்த அரச மரத்தடியிலுள்ள மேடைக்கு வா!" என்றார்.

"அப்படியே ஆகட்டும், தாத்தா!" என்று ஆதித்த கரிகாலன் குதிரையிலிருந்து கீழே குதித்தான்.

கிழவரும் ரதத்திலிருந்து இறங்கினார்.

இருவரும் அரச மரத்தடி மேடைக்குச் சென்றார்கள்.

அப்போது பார்த்திபேந்திரன் கந்தமாறனைப் பார்த்து, "நல்ல வேளையாகப் போயிற்று. இந்தக் கிழவர் விடேன் தொடேன் என்று நம்முடன் நெடுகிலும் வந்து விடுவாரோ எனப் பயந்து கொண்டிருந்தேன்!" என்றான்.

"அப்படித் தொடர்ந்து வந்தால் இவரை வெள்ளாற்றின் பிரவாகத்தில் தள்ளி முழுக அடித்து விடுவது என்று நான் எண்ணியிருந்தேன்!" என்றான் கந்தமாறன்.

இருவரும் தங்கள் பேச்சில் தாங்களே சிரித்து மகிழ்ந்தார்கள்.

ஆதித்த கரிகாலனைப் பார்த்து மலைநாடு உடையாராகிய திருக்கோவலூர் மலையமான் சொல்லலுற்றார்:—

"ஆதித்தா! இன்றைக்கு இருபத்து நான்கு ஆண்டுகளுக்கு முன்னால் நீ பிறந்தாய்! திருக்கோவலூரில் என்னுடைய அரண்மனையிலேதான் பிறந்தாய்! அச்சமயம் நடந்த கொண்டாட்டங்கள் நேற்று நடந்தது போல் எனக்கு ஞாபகமிருக்கின்றன. உன்னுடைய குலத்தைச் சேர்ந்தவர்களும் என்னுடைய குடியைச் சேர்ந்தவர்களும் சோழ நாட்டையும் தொண்டை நாட்

அமரர் கல்கி

டையும் சேர்ந்த சிற்றரசர்கள் பலரும் வந்திருந்தார்கள். இவர்கள் எல்லோரையும் சேர்ந்த வீரர்கள் முப்பதினாயிரம் பேர் வந்திருந்தார்கள். அவர்களுக்கெல்லாம் நடந்த விருந்தின் விமரிசையைச் சொல்லி முடியாது. உன் தந்தையின் பட்டாபிஷேக வைபவத்தின் போது கூட அத்தகைய விருந்துகளும் கோலாகலங்களும் நடைபெறவில்லை. என் பொக்கிஷத்தில் என் முன்னோர்கள் காலத்திலிருந்து நூறு வருஷங்களாகச் சேர்த்து வைத்திருந்த பொருள் அவ்வளவும் அந்த மூன்று நாள் கொண்டாட்டத்தில் தீர்ந்து போய்விட்டது!

அச்சமயம் உன்னுடைய கொள்ளுப் பாட்டனாராகிய பராந்தக சக்கரவர்த்தியே திருக்கோவலூருக்கு வந்திருந்தார். உன் பெரிய பாட்டனார் கண்டராதித்தரும் உன் தந்தை சுந்தர சோழரும் வந்திருந்தார்கள். ஆண் குழந்தை பிறந்த செய்தி அறிந்ததும் அவர்கள் அனைவரும் அடைந்த ஆனந்தத்துக்கு அளவேயில்லை. சோழர் குலத்தை விளங்க வைப்பதற்கு நீ பிறந்து விட்டாய் என்று குதூகலம் அடைந்தார்கள். உன் பாட்டனின் மூத்த தமையன்மார்களுக்கு அதுவரையில் சந்ததியில்லை. அரிஞ்சயனுக்கும் உன் தகப்பன் ஒரே மகனாக விளங்கினான். அவன் உன் பிராயத்தில் மன்மதனையொத்த அழகுடன் விளங்கினான். சோழ குலத்திலோ அல்லது தமிழகத்துச் சிற்றரசர் வம்சத்திலோ அவ்வளவு அழகுடைய பிள்ளையை யாரும் அதற்குமுன் கண்டதில்லை. இதனால் உன் தந்தைக்குச் சில சங்கடங்களும் நேர்ந்தன. குடும்பத்தார் அனைவருக்கும், அவன் செல்லப் பிள்ளையாக இருந்தான். அரண்மனைப் பெண்டிர்கள் அவனுக்குப் பெண் வேடம் போட்டுப் பார்த்து மகிழ்ந்தார்கள். 'இவன் மட்டும் பெண்ணாய்ப் பிறந்திருந்தால்?' என்று பேசிப் பேசிப் பூரித்தார்கள். உன் தந்தைக்குத் தங்கள் பெண்ணைக் கொடுப்பதற்கு இலங்கை முதல் விந்திய பர்வதம் வரையில் உள்ள மன்னாதி மன்னர்களும் சிற்றரசர்களும் தவம் கிடந்தார்கள். அர்ச்சுனனையும் மன்மதனையும் நிகர்த்த அழகன் அவன் என்பதுடன் சோழ சிங்காதனத்துக்கு உரியவன் என்ற எண்ணத்தினாலும் அவ்வளவு ஆர்வத்துடன் இருந்தார்கள். உன் தந்தையை மருமகனாகப் பெறும் பேறு கடைசியில் எனக்குக் கிடைத்தது.

எங்கள் வம்சத்தில் நாங்கள் ஆண் ஆகட்டும், பெண் ஆகட்டும் மேனி அழகுக்குப் பெயர் போனவர்கள் அல்ல. ஆண் பிள்ளைகள் உடம்பில் எத்தனைக்கெத்தனைப் போர்க் காயங்களைப் பெறுகிறோமோ, அவ்வளவுக்கு அழகுடையவர்களாக எண்ணிக் கொள்வோம். எங்கள் குலத்துப் பெண்களுக்குக் கற்புக் குணமும்தான் அழகும் ஆபரணமும் உன் தந்தைக்கு என் மகளைக் கல்யாணம் செய்வதென்று தீர்மானித்த போது மலையமானாடு முழுதும் அல்லோலகல்லோலப்பட்டது. அவ்வளவுக்குத் தமிழகத்துச் சிற்றரசர்கள் எல்லாரும் அசூயை கொண்டார்கள் அதை நான் பொருட்படுத்தவில்லை மூன்று உலகமும் பிரமிக்கும்படியாக உன் பெற்றோர்களின் திருமணம் தஞ்சையில் நடந்தது. என்றாலும், அப்போது நடந்த கொண்டாட்டத்தைக் காட்டிலும் நீ பிறந்த போது திருக்கோவலூரில் நடந்த கொண்டாட்டந்தான் அதிக குதூகலமாயிருந்தது. உனக்கு என்ன பெயர் வைப்பது என்பது பற்றிக் குதூகலமான சர்ச்சை நடந்தது. சிலர், உன் குலத்து முன்னோரில் மிகப் புகழ்பெற்ற கரிகால் வளவன் பெயரை இடவேண்டும் என்றார்கள். நானும் இன்னும் சிலரும் உன் பெரிய பாட்டனார் இராஜாதித்யர் பெயரைத்தான் வைக்க வேண்டும் என்று வற்புறுத்தினோம். கடைசியில் இரண்டையும் சேர்த்து 'ஆதித்த கரிகாலன்' என்று உனக்கு நாமகரணம் செய்தார்கள்.



அதோ பார்! ஆதித்தா! திருநாவலூரின் கோவில் சிகரம் தெரிகிறது. நம்பி ஆரூரர் சுந்தரமூர்த்தி அடிகள் பிறந்த ஸ்தலம் அது. அங்கே, இன்றைக்கு

இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் உன் பெரிய பாட்டனார் இராஜாதித்ய சோழர் முகாம் செய்திருந்தார். கதைகளிலும் காவியங்களிலும் வரும் எத்தனையோ வீரர்களைப் பற்றிக் கேட்டறிந்திருக்கிறேன். இந்த வீரத் தமிழகத்தில் எவ்வளவோ வீரர்களைப் பார்த்துமிருக்கிறேன். ஆனால் இராஜாதித்யரைப் போன்ற இன்னொரு வீரரைப் பார்த்ததுமில்லை; கேட்டதுமில்லை. போர்க்களத்தில் அவர் போர் செய்வதைப் பார்த்தவர்கள் யாராயிருந்தாலும், அப்படித்தான் சொல்லுவார்கள்.

ஒரு மாபெரும் சைன்யத்தைத் திரட்டிக் கொண்டு வடநாட்டின் மீது படை எடுத்துச் செல்ல அவர் இங்கே ஆயத்தம் செய்து கொண்டிருந்தார். இரட்டை மண்டலத்து அரசனாகிய கன்னரதேவனை முறியடித்து, மானியகேடம் என்னும் அவனுடைய தலைநகரைத் தரைமட்டமாக்க வேண்டும் என்று அவர் உறுதி கொண்டிருந்தார். முன்னொரு காலத்தில் பல்லவ குலத்து மாமல்ல சக்கரவர்த்தி வாதாபி நகரை அழித்தது போல், மானிய கேட நகரை அடியோடு அழித்தால்தான் இரட்டை மண்டலத்தாரின் கொட்டம் அடங்கும் என்றும், தானும் மாமல்லரைப் போல் புகழ் பெறலாம் என்றும் இராஜாதித்யர் எண்ணினார். அதற்கு வேண்டிய மாபெரும் சைன்யத்தைத் திரட்டுவதென்றால் இலேசான காரியமா? மாமல்லர் ஏழு வருஷ காலம் படை திரட்டியதாகச் சொல்லுவார்கள். அவ்வளவு காலம் தனக்கு வேண்டியதில்லையென்றும் மூன்று அல்லது நாலு ஆண்டுகள் போதும் என்றும் இராஜாதித்யர் கூறினார். படை திரட்டிச் சேர்ப்பதற்கும், திரட்டிய படைகளுக்குப் போர்ப் பயிற்சி தருவதற்கும் தகுந்த பிரதேசம் இந்தக் கெடிலம் ஆற்றுக்கும் தென் பெண்ணை நதிக்கும் இடைப்பட்ட நாடுதான் என்று தேர்ந்தெடுத்தார்.

"ஆதித்தா! அந்த நாளில் இந்த இரு நதிகளுக்கும் இடையிலுள்ள பிரதேசத்தை நீ பார்க்கக் கொடுத்து வைக்கவில்லை. அந்தக் காட்சிகளைப் பார்த்தவர்களோ உயிர் உள்ள வரையில் அதை மறக்க மாட்டார்கள். திருநாவலூரில் இராஜாதித்யர் முப்பதினாயிரம் வீரர்களுடன் தங்கியிருந்தார். பெண்ணையாற்றங்கரையிலுள்ள முடியூரில் சேர நாட்டுச் சிற்றரசன் வெள்ளன் குமரன் இருபதினாயிரம் வீரர்களுடன் முகாம் செய்திருந்தான். உன் பாட்டன் அரிஞ்சயன் என்னுடன் திருக்கோவலூரில் இருந்தான். நானும் அரிஞ்சயனும் ஐம்பதினாயிரம் வீரர்களை ஆயத்தம் செய்தோம். இன்னும் கொடும்பாளூர்ப் பெரிய வேளான், இன்று சோழ நாட்டுக்குச் சனியனாக முளைத்திருக்கும் பழுவேட்டரையன், கடம்பூர் சம்புவரையன், இந்தத் திருமுனைப்பாடி நாட்டின் சிற்றரசனான முனையதரையன், மழநாட்டு மழவரையன், குன்றத்தூர்க் கிழான், வைதும்பராயன் முதலியவர்கள் தத்தம் படைகளுடன் இந்த இரண்டு நதிகளுக்கும் இடையில் தங்கியிருந்தார்கள். யானைப் படைகளும், குதிரைப் படைகளும், தெரிந்த கைக்கோளரின் மூன்று கைப் படைகளும் இங்கே முகாம் போட்டிருந்தன. இப்படித் தங்கியிருந்த படைகளுக்குள்ளே அடிக்கடி பயிற்சிப் போர்கள் நடக்கும். யானைகளோடு யானைகள் மோதும் போது பூகம்பம் வந்து விட்டதாகத் தோன்றும். குதிரைப் படைகளின் அணிவகுப்புகள் வேல் பிடித்த வீரர்களுடன் பாய்ந்து செல்லுங்கால் எழும் சப்தம் பிரளய கால சமுத்திரம் பொங்கிவருவது போலிருக்கும். வீரர்கள் வில்லுகளிலிருந்து அம்புகள் விட்டுப் பழகிக் கொள்ளும்போது அந்தச் சரமாரியினால் வானமே மறைந்து விடும். எதிரிப் படைகளைத் தாக்குவதற்காக ஆயிரமாயிரம் வீரர்கள் 'நாவலோ நாவல்' என்று ஏககாலத்தில் கர்ஜித்துக் கொண்டு கிளம்பிப் பாயும் போது உலகத்தின் முடிவு நெருங்கி விட்டதாகவே தோன்றும். இதையெல்லாம் வேடிக்கை பார்ப்பதற்குத் திரள் திரளாக ஜனங்கள் வருவார்கள்.

இந்தத் திருமுனைப்பாடி நாட்டிலும் நடுநாட்டிலும் உள்ள ஜனங்கள் மிக நல்லவர்கள். அதோடு வீரம் மிகுந்தவர்கள். இங்கே படை திரண்டிருந்த போது அவர்களுடைய வி

சாயத்துக்குப் பெரும் குந்தகங்கள் நேர்ந்தன. அதை எல்லாம் அவர்கள் பொருட்படுத்தவில்லை. இத்தகைய மக்களுக்கு நன்றி தெரிவித்துக் கொள் வதற்காகவே இராஜாதித்யர் இந்த இரண்டு நாட்டிலும் பல ஏரிகள் தோண்டுவித்தார். கொள்ளிடத்தி லிருந்து புதிய ஆறு வெட்டிக் கொண்டு வந்து வீர நாராயணபுரத்து ஏரியில் தண்ணீர் நிரப்புவதற்கும் ஏற் பாடு செய்தார். ஆதித்தா! அந்த ஏரி யின் வளத்தினால் பெருநன்மை அடைந்தவன் கடம்பூர் சம்புவரையன். அவன் அன்றைக்கு இராஜாதித்யரின் அடிபணிந்து நின்ற நிலையையும் இன்று அடைந்திருக்கும் செல்வச் செருக்கையும் ஒப்பிட்டுப் பார்த்தால் எனக்குப் பெரு வியப்பு உண்டா கிறது!,....''

ஆதித்த கரிகாலன் குறுக்கிட்டு, ''தாத்தா! சம்புவரையர் செருக்கைப் பற்றித் தங்களுக்கு என்ன கவலை? தக்கோலத்தில் நடந்த யுத்தத்தைப் பற் றிச் சொல்லுங்கள். இந்தக் கெடிலக் கரையில் திரட்டிய மாபெரும் சைனி யம் எப்போது இங்கிருந்து புறப்பட் டது? அவ்வளவு முன்னேற்பாடுகள் செய்திருந்தும், என் பெரிய பாட்ட னார் அவ்வளவு பெரிய மகா வீரரா யிருந்தும், ஏன் நம் படைகள் தக்கோ லத்தில் தோல்வியுற்றன? தாங்களும் அந்தப் போரில் கலந்து போரிட்டவர் அல்லவா? ஆகையால் நேரில் பார்த் துத் தெரிந்து கொண்டிருப்பீர்களே?'' என்றான்.

''ஆம்; நானும் அந்தப் போர்க் களத்தில் இருந்தேன். அதைப் பற்றித், தான் உனக்குச் சொல்லப் போகி றேன்.

இராஜாதித்யர் இங்கே பல வகைப் படைகள் திரட்டித் தூர தேசங்களுக் குச் சென்று போர் செய்வதற்குப் பயிற்சி அளித்துக் கொண்டிருந்தார் அல்லவா? சில காரணங்களினால் உத்தேசித்திருந்த காலத்துக்குள் அவர் புறப்பட முடியவில்லை. இலங்கையில் மறுபடியும் போர் மூண்டதாகச் செய்தி வந்தது. அதை வெற்றிகரமாக முடிப் பதற்கு மேலும் படைகள் அனுப்ப வேண்டியிருந்தது. தெற்கே ஒரு பகைவனை வைத்துக் கொண்டு வடக்கே நெடுந்தூரம் சோழ நாட் டின் முக்கிய சேனா வீரர்களும் தளபதி களும் போவதைச் சக்கரவர்த்தி விரும்பவில்லை. இலங்கைப் போர் முடிந்ததாகச் செய்தி வந்த பிறகு புறப் படலாம் என்று கூறி வந்தார். இராஜா தித்யரும் தந்தையின் வார்த்தையைத் தட்ட முடியாமல் பொறுமையுடன் காத்திருந்தார். ஆனால் பகைவர்கள் அவ்விதம் காத்திருக்க இணங்க வில்லை. இரட்டை மண்டலச் சக்கர வர்த்தி கன்னரதேவனும் அதே சமயத் தில் சோழ நாட்டின் மீது படை எடுப் பதற்காகப் பெரிய சைன்யம் சேர்த்துக் கொண்டு வந்தான். அந்த மாபெரும் சைன்யத்துடன் அவன் தெற்கு நோக்கிப் புறப்பட்டு விட்டான். கங்க நாட்டு மன்னன் பூதுகனும் தன் பெரும் படையுடன் கன்னர தேவ னோடு சேர்ந்து கொண்டான். வட கடலும் தென் கடலும் ஒன்று சேர்ந் தாற் போல் இரட்டை மண்டல சைன் யமும் கங்க நாட்டுப் பூதுகன் சைன்ய மும் சேர்ந்து ஒரு மகா சமுத்திரமாகி முன்னேறி வந்தது. அந்தச் சமுத்திரத் தில் யானைகளாகிற திமிங்கலங்கள் ஆயிரக்கணக்கிலும் குதிரைகளாகிய மகர மீன்கள் பதினாயிரக் கணக்கி லும் இருந்தன. பிரளய காலத்தில் ஏழு கடலும் சேர்ந்து பொங்குவது போல் பொங்கி முன்னேறி வந்த அந்தச் சேனா சமுத்திரம் தென் னாட்டை அடியோடு மூழ்க அடித்து விடும் என்று தோன்றியது. அந்தச் சைன்யத்தைப் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொண்டு முன்னால் வாயு வேக மனோ வேகமாக ஓடி வந்து அறிவித்த நம் ஒற்றர்கள் அவ்வாறு சொன்னார்கள்.

ஆனால் இதுவும் ஒரு விதத்தில் நல்லதே என்று பராந்தக சக்கரவர்த்தி கூறினார். நம்முடைய சைன்யங்க ளைத் தொலை தூரம் பிரயாணம் செய்யப் பண்ணி, பிரயாணக் களைப் புடன் பகைவர்களின் நாட்டில் எதிரி சைன்யத்துடன் போர் புரியச் செய் வதைக் காட்டிலும், எதிரி சைன்யங் களை நமது நாட்டுக்குச் சமீபமாக இழுத்து அவர்களை நாலாபுறமும் மடக்கி அதம் செய்வது தான் நல்ல போர் முறை என்று சக்கரவர்த்தி

கூறினார். எதிரி சைன்யம் வடவேங்கடம் வரை நெருங்கி விட்டதென்று தெரிந்த பிறகு தான் பிரயாணப்படுவதற்கு அனுமதி கொடுத்தார்.



னுமதி கிடைத்ததோ, இல்லையோ, இராஜாதித்யர் புறப்பட்டு விட்டார். மூன்று லட்சம் காலாள் வீரர்களும், ஐம்பதினாயிரம் குதிரை வீரர்களும், பதினாயிரம் போர் யானைகளும், இரண்டாயிரம் ரதங்களும், முந்நூற்றிருபது தளபதிகளும், முப்பத்திரண்டு சிற்றரசர்களும் அப் பெரும் சைன்யத்தில் சேர்ந்து சென்றார்கள். அவர்களிலே ஒருவனாகச் செல்லும் பாக்கியம் எனக்கும் கிடைத்தது. ஆனால் உயிர் பிழைத்துத் திரும்பி வந்த துர்ப்பாக்கிய சாலியும் ஆனேன்.

மூன்று நாள் பிரயாணத்துக்குப் பிறகு காஞ்சிக்கு வடக்கே இரண்டு காத தூரத்தில் தக்கோலம் என்னும் இடத்தில் நம் படைகளும் எதிரிகளின் படைகளும் போர்க்களத்தில் சந்தித்தன!

ஆதித்தா! புராணங்களில் தேவேந்திரனுக்கும் விருத்திராசுரனுக்கும் நடந்த யுத்தம் பற்றிக் கேட்டிருக்கிறோம். இராம ராவண யுத்தம் பற்றி

யும் பாண்டவர் கௌரவர் யுத்தம் பற்றியும் அறிந்திருக்கிறோம். தக்கோலத்தில் நடந்த கோர யுத்தத்தை நேரில் பார்த்தவர்கள் அந்த யுத்தங்கள் எல்லாம் அற்பமானவை என்றே சொல்லுவார்கள். நம்முடைய படைகளைக் காட்டிலும் எதிரிகளின் படைகள் சுமார் இரண்டு மடங்கு அதிகமாயிருந்தன. ஐந்து லட்சம் வீரர்களும் முப்பதினாயிரம் போர் யானைகளும் அச் சைன்யத்தில் இருந்ததாகத் தெரிந்தது. இருந்தால் என்ன? உன்னுடைய பெரிய பாட்டனார் இராஜாதித்யரைப் போன்ற சேநாதிபதி அந்தச் சைனியத்தில் இல்லை. ஆகையால் வீர லக்ஷ்மியும் ஜயலக்ஷ்மியும் நம்முடைய பக்கத்திலேயே இருந்து வருவதாகத் தோன்றியது.



த்து நாள் வரையில் யுத்தம் நடந்தது. இரு பக்கத்திலும் இறந்து போன வீரர்களைக் கணக்கு எடுப்பது அசாத்தியமாயிற்று. போர்க் களங்களில் கரிய குன்றுகளைப் போல் யானைகள் இறந்து விழுந்து கிடந்தன. இரு பக்கத்திலும் சேதம் அதிகமாயிருந்தாலும், எதிரிகளின் கட்சியே விரைவில் பலவீனமடைந்தது. இதற்குக் காரணம் என்னவென்பதை எதிரிகள் கண்டு கொண்டார்கள். புலிக் கொடியைக் கம்பீரமாகப் பறக்க விட்டுக் கொண்டு இராஜாதித்யரின் யானை போகுமிடமெல்லாம் ஜயலக்ஷ்மியும் தொடர்ந்து போகிறாள் என்பதை அறிந்து கொண்டார்கள். எங்கெங்கே நமது படையில் சோர்வு ஏற்படுகிறதாகத் தென்பட்டதோ அங்கே இராஜாதித்யரின் யானை போய்ச் சேர்ந்தது. அந்த யானையையும் அதன் மீது வீற்றிருந்த வீர புருஷரையும் பார்த்ததும் நம் வீரர்கள் சோர்வு நீங்கி மும்மடங்கு பலம் பெற்று எதிரிகளைத் தாக்கினார்கள். இதையெல்லாம் பத்து நாளும் கவனித்து வந்த பகைவர்கள் ஒரு படுபாதகமான சூழ்ச்சி செய்தார்கள். அது சூழ்ச்சி என்று பின்னால்தான் தெரிய வந்தது. சூழ்ச்சி செய்தவனும் அதை நிறைவேற்றி வைத்தவனும் கங்க மன்னன் பூதுகன்தான். திடீரென்று அந்தப் பாதகன் தன் யானையின் மீது சமாதானக் கொடியைப் பறக்க விட்டுக் கொண்டு இரண்டு கைகளையும் தலைக்கு மேல் தூக்கிக் கொண்டு 'சரணம்! சரணம்!' என்று கூவிக் கொண்டு வந்தான். அச்சமயம் இராஜாதித்யரே சமீபத்தில் இருந்தார். புலிக் கொடி பறந்த அவருடைய யானையின் அம்பாரியைப் பார்த்த பின்னரே பூதுகன் அவ்வாறு செய்திருக்க வேண்டும். மகா வீரராகிய இராஜாதித்யர் இவ்வாறு ஒரு பகை மன்னன் 'சரணாகதி' என்று சொல்லிக் கொண்டு வருவதைப் பார்த்ததும் மனம் இளகி விட்டார். இரட்டை மண்டலச் சக்கரவர்த்தியே போரை நிறுத்தச் சமாதானம் கோருகிறாரா அல்லது அவரைப் பிரிந்து இந்தப் பூதுகன் மட்டும் நம்முடன் சேர வருகிறானா என்று தெரிந்து கொள்ள விரும்பினார். ஆகையால் சங்கநாதம் செய்து தன்னைச் சுற்றி நின்ற மெய்க்காப்பாளரை விலகச் செய்தார். பூதுகன் ஏறியிருந்த யானையைத் தாம் ஏறியிருந்த யானைக்கு அருகில் வரும்படி சமிக்ஞை செய்தார். பூதுகன் இராஜாதித்யரின் அருகில் வரும் வரையில் கைகூப்பிய வண்ணம் வந்தான். அவனுடைய கண்களிலிருந்து கண்ணீர் பெருகியதையும் இராஜாதித்யர் பார்த்தார். இதனால் அவருடைய மனம் இன்னும் இளகி விட்டது.

'தொழுத கையுள்ளும், படையொ
டுங்கும், ஒன்னார்
அழுத கண்ணீரும் அனைத்து'

என்னும் தமிழ்நாட்டுப் பெரும் புலவரின் வாக்கு அச்சமயம் இராஜாதித்யரின் ஞாபகத்தில் இருக்கவில்லை. கண்ணீரைக் கண்டு கரைந்து விட்டார். இன்னும் சமீபமாகப் பூதுகனை வரவிட்டு, 'என்ன சேதி?' என்று கேட்டார். அதற்கு அவன் கூறிய மறுமொழி இராஜாதித்யரை அருவருப்புக் கொள்ளும்படி செய்தது. இரட்டை மண்டலப் படைகளுக்குத் தோல்வி நிச்சயம் என்று தெரிந்து விட்டதால்

சரணாகதி அடைந்து விடும்படி கன்னர தேவனிடம் தான் கூறியதாயும், அவன் அதை மறுத்து விட்டபடியால் தான் மட்டும் தனியே பிரிந்து வந்து சரணாகதி அடையத் தீர்மானித்ததாகவும் பூதுகன் கூறினான். இதைக் கேட்டதும் இராஜாதித்யர் அவனைக் கடுமையாக நிந்தித்தார்.

அத்தகைய நீசனைத் தாம் தம் கட்சியில் சேர்த்துக் கொள்ள முடியாது என்றும், திரும்பிப் போகும்படியும் கூறிக் கொண்டிருக்கும் போதே, பூதுகன் கண்மூடிக் கண் திறக்கும் நேரத்தில் அந்தப் பயங்கரமான வஞ்சகச் செயலைப் புரிந்து விட்டான். மறைவாக வைத்திருந்த வில்லையும் அம்பையும் எடுத்து வில்லில் நாணேற்றி அம்பைப் பூட்டி எய்து விட்டான். அந்தக் கொடிய விஷம் தோய்ந்த அம்பு எதிர்பாராத சமயத்தில் இராஜாதித்யரின் மார்பில் பாய்ந்ததும் அவர் சாய்ந்தார். இப்படிப்பட்ட வஞ்சனையை யாரும் எதிர்பார்க்கவில்லையாதலால் சுற்றிலும் நின்ற வீரர்கள் என்ன நேர்ந்தது என்பதையே சிறிது நேரம் தெரிந்து கொள்ளவில்லை. இராஜாதித்யர் பூதுகனைத் திரும்பிப் போகும்படி கட்டளையிட்டது மட்டும் அவர்கள் காதில் விழுந்தது. உடனே பூதுகன் தன் யானையை விரட்டி அடித்துக் கொண்டு ஓடிப் போனான்!



ராஜாதித்யர் யானை மேலிருந்தபடியே மரணமடைந்தார் என்ற செய்தி பரவியதும் நமது படையைச் சேர்ந்தவர்கள் அனைவருக்கும் தனித் தனியே தலையில் இடி விழுந்தது போல் ஆகி விட்டது. அந்த மாபெரும் துயரத்தினால் யுத்தத்தையே மறந்து விட்டார்கள். சிற்றரசர்கள், தளபதிகள், படை வீரர்கள் எல்லாருமே செயல் இழந்து புலம்பத் தொடங்கி விட்டார்கள். அந்த நிலைமையில் பகைவர்களின் கை ஓங்கி விட்டதில் ஆச்சரியம் இல்லையல்லவா? சிறிது நேரத்துக்கெல்லாம் நமது சைனியம் பின் வாங்க வேண்டிய அவசியம்



இராஜாதித்யன்

ஏற்பட்டு விட்டது. ஓடுகிறவர்களைத் துரத்துவது எல்லாருக்குமே எளிது தானே? அப்படி ஓடி வந்தவர்களில் நானும் ஒருவன் தான்! இந்தக் கெடில நதிக்கரை வரையிலே கூடப் பகைவர்களின் சைனியம் வந்து விட்டது. இங்கே வந்த பிறகுதான் நாங்கள் சுய உணர்வு பெற்றுத் திரும்பி நின்றோம். பகைவர்களைத் தடுத்து நிறுத்தினோம். நான் திருக்கோவலூரிலிருந்து என் குடும்பத்தாரை அழைத்துக் கொண்டு போய் மேற்கே மலை நாட்டில் இருக்கும் என்னுடைய கோட்டையிலே விட்டேன். அந்த மலைச்சாரலிலேயே படைகளைத் திரட்டினேன். இந்தக் கெடில நதி வரையில் வந்து விட்ட பகைவர்களை அவ்வப்போது தாக்கிக் கொண்டு வந்தேன். ஆயினும் அப்போது வந்த பகைவர்கள் பல வருஷ காலம் இந்தப் பகுதியை விட்டுப் போகவில்லை. அங்குமிங்கும் தங்கித் தொல்லை கொடுத்துக் கொண்டுதானிருந்தார்கள். காஞ்சி நகர் அவர்கள் வசத்திலேதான் இருந்தது. மூன்று ஆண்டுகளுக்கு முன்னால் நீ வீரபாண்டியனை முறியடித்த பிறகு இந்தப் பக்கம் வந்துதான் காஞ்சி நகரை மீட்டாய்...."

ஆதித்த கரிகாலன் மீண்டும் குறுக்கிட்டு, "தாத்தா! இதெல்லாம் எனக்கு முன்னமே தெரிந்ததுதான்! ஆனால் தக்கோலப் போரைப் பற்றியும் இராஜாதித்யர் வரலாற்றையும் எத்தனை

தடவை கேட்டாலும் எனக்கு அலுப்ப தில்லை. இப்போது இராஜாதித்ய ரைப் பற்றி எனக்கு எதற்காக நினைப்பூட்டினீர்கள்? அதைச் சொல் லுங்கள்!'' என்றான்.

''குழந்தாய்! உன் பெரிய பாட்ட னார் இராஜாதித்யர் சோழ சாம்ராஜ் யத்தை இலங்கை முதல் கங்கை நதி வரையில் விஸ்தரிக்க ஆசை கொண் டிருந்தார். அந்த ஆசை நிறைவேறா மலே உயிர் நீத்தார். அவரைப் போன்ற மகா வீரன் என் பேரன் ஆதித்த கரிகாலன் என்று நாடு நகர மெல்லாம் பேச்சாயிருக்கிறது. அவர் சாதிக்க நினைத்த காரியத்தை நீ சாதிக்கப் போகிறாய் என்று இத் தமிழகமெங்கும் ஜனங்கள் பேசிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் இராஜாதித்யரைப் போல் நீயும் வஞ்ச கத்திற்கு ஏமாந்து போகக் கூடாது என்பதற்காகவே அவருடைய வர லாற்றை உனக்கு நினைவூட்டி னேன்....''

''தாத்தா! என் பெரிய பாட்டனார் போர்க்களத்தில் பகைவர்களின் வஞ் சனையினால் உயிரை இழந்தார். அதை இப்போது எனக்கு எதற்காக நினைவூட்டுகிறீர்கள்? நான் போர்க் களத்துக்குப் போகவில்லையே? என்னை வஞ்சிக்கக் கூடிய பகைவர் களின் மத்தியிலும் போகவில்லையே? என் தந்தையின் அத்யந்த நண்பர் களையல்லவா பார்க்கப் போகிறேன்? அவர்கள் என்னை எந்த விதத்தில் எதற்காக வஞ்சிக்கப் போகிறார் கள்?'' என்றான் ஆதித்த கரிகாலன்.

''கேள், கரிகாலா! எதிரிகள் தொழுத கையிலும் அழுத கண்ணீரி லும் கொடிய ஆயுதம் இருக்கக்கூடும் என்று கூறிய திருவள்ளுவர் பெரு மான், வெளிப் பகையைக் காட்டிலும் உட்பகை கொடியது என்றும் கூறி யிருக்கிறார்:

'வாள்போல் பகைவரை அஞ்சற்க அஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு'

வாளைப் போல் வெளிப்படையாக எதிர்த்து நிற்கும் பகைவர்களிடம் பயம் வேண்டியதில்லை; சிநேகிதர் களைப் போல் நடிக்கும் பகைவர் களிடமே பயப்பட வேண்டும் என்று சொல்லியிருக்கிறார். குழந்தாய்! கேளிரைப் போல் நடிக்கும் பகைவர் களின் மத்தியில் இப்போது போகி றாய். நான் வேண்டாம் என்று தடுத் தும் கேளாமல் நீ போகிறாய். ஏதோ ராஜ்யம் சம்பந்தமாகத் தகராறு நேர்ந்து விட்டதாகவும் அதைத் தீர்த்து வைக்கப் போவதாகவும் உன்னை அழைத்திருக்கிறார்கள். சம்புவரை யன் மகள் ஒருத்தியை உன் கழுத்தில் கட்டிவிட உத்தேசித்து உன்னை அழைத்திருப்பதாகவும் அறிகிறேன். ஆனால் அவர்களுடைய உண்மை யான நோக்கம் இன்னதென்பது எனக்கும் தெரியாது; நீயும் அறிந் திருக்க முடியாது. உனக்குப் பெண் கொடுப்பதற்கு இந்தப் பாரத தேசத் தில் மன்னாதி மன்னர்கள் பலர் காத் திருக்கிறார்கள். இந்தச் சம்புவரை யன் மகள்தான் வேண்டுமென்ப தில்லை. இராஜ்யத்தை உனக்குப் பாதி என்றும் மதுராந்தகனுக்குப் பாதி என்றும் பிரித்துக் கொடுத்துச் சமாதானம் செய்விக்கப் போகிறார் கள் என்றும் கேள்விப்படுகிறேன். அதில் என்ன சூது இருக்குமோ, சூழ்ச்சி இருக்குமோ, எனக்குத் தெரி யாது. எது எப்படியானாலும், நான் உடனே திருக்கோவலூருக்குச் சென்று என்னுடைய பாதுகாப்புப் படைகளையெல்லாம் திரட்டிக் கொண்டு வந்து வெள்ளாற்றங் கரை யில் தங்கியிருப்பேன். சம்புவரையர் அரண்மனையில் இருக்கும் போது உனக்கு ஏதேனும் சந்தேகம் தோன்றி னால் எனக்கு உடனே சொல்லி அனுப்பு!....''

இச்சமயம் ஆதித்த கரிகாலனு டைய கவனம் தன் பக்கம் இல்லை என்பதையும் வேறு பக்கம் திரும்பி யிருக்கிறதென்பதையும் மலையமான் கண்டார்.

''தாத்தா! அதோ பாருங்கள்!'' என்று ஆதித்த கரிகாலன் கலக்கத் துடன் கூறிய வார்த்தைகளை அந்த வீரக் கிழவர் கேட்டு, அந்தத் திசையை உற்று நோக்கினார்.

(தொடரும்)

# PARRY'S PAGE



**அருமைக் குழந்தைகளே!**

உங்களுக்கு என்ன தரப்போகிறேன் என்று தெரியுமா? வேடிக்கையும் விளையாட்டும் நிறைந்த உல்லாச உலகம்! எனக்கு உதவி செய்ய யார் யார் இருக்கிறார்கள் தெரியுமா? காஃபி பைட், சாக்லேட் எக்ளேர்ஸ் உங்கள் நண்பர்களும் நீங்களும் சேர்ந்து ரசிக்கவும் விளையாடவும் இங்கு நிறைய உள்ளன.



THE KING OF SWEETS

இதுதான் காஃபி பைட். இவன் ஒரு விளையாட்டைச் செய்து நீங்கள் விளையாட சொல்லித் தரப் போகிறான்.

## கோலி விளையாட்டு



தேவையானவை, ஒரு சின்ன அட்டைப்பெட்டி (ஷூ-பாக்ஸ்கூட போதும்), கொஞ்சம் கோலிகள் அட்டைப்பெட்டியின் ஒரு பக்கத்தில் 2, 3 வளைவுகளை வெட்டுங்கள். அட்டைப்பெட்டியின் அடிப்பாகத்தையும் வெட்டிவிடுங்கள். ஒவ்வொரு வளைவின் மீது பாயின்ட் எண்ணிக்கையை குறியுங்கள். சற்று தள்ளி நின்றுகொண்டு கோலிகளை பெட்டியை நோக்கி உருட்டுங்கள் கோலி எந்த வளைவின் வழியாக பெட்டிக்குள் போகிறதோ, அந்த வளைவின்மேல் எழுதப்பட்டுள்ள பாயின்ட் உங்களுக்குக் கிடைக்கும். உங்கள் நண்பர்களுடன் விளையாடுங்கள் யார் முதலில் 100 பாயின்ட் பெறுகிறார்களோ அவர்கள்தான் வெற்றி பெற்றவர்கள்.



**உங்களுக்குத் தெரியுமா?**
நத்தை ரொம்ப சாதுவானது என்று நாம் நினைத்துக் கொண்டிருக்கிறோம். ஒரு சின்ன நத்தைக்கே கிட்டத்தட்ட 25,000 பற்கள் இருக்கின்றன. அது நம்மை கடிக்க நினைத்தால் என்ன ஆகும்?



இப்போது உங்களுக்கு 'பிளாஸ்டிக் மனிதர்கள்' எப்படி செய்வது என்பதை நான் சொல்லிக் கொடுக்கப் போகிறேன்.

**தேவையானவை:**

பழைய பிளாஸ்டிக் டின்கள் (அல்லது) காலி ஐஸ்-கிரீம் கப்புகள், வெள்ளை பேப்பர், அட்டை, கம்பளி நூல், வர்ணங்கள், ஸ்கெட்ச் பேனுக்கள், கத்தரிக்கோல்.



வெள்ளைப் பேப்பருக்கு இளஞ்சிவப்பு வர்ணம் அடித்து உலர வையுங்கள். அதை கப்பைச் சுற்றி ஒட்டுங்கள். கம்பளி நூலைக்கொண்டு மீசை, தலைமுடி ஒட்டுங்கள் (வெவ்வேறு கலர் நூலைக்கூட உபயோகிக்கலாம்) அட்டையில் குல்லா, ஷூ ஆகியவைகளை வெட்டி, கப்பில் ஒட்டுங்கள். ஸ்கெட்ச் பேனாவைக் கொண்டு மீதி முகத்தை வரையவும். பட்டன்கள் அல்லது விதைகளை கண்கள் இடத்தில் ஒட்டலாம். இல்லாவிட்டால் வரைந்துவிடலாம். இந்த பிளாஸ்டிக் மனிதர்களுக்கு ஏதாவது பெயரைக் கொடுங்கள், உங்கள் நண்பனுக்கு அல்லது பிரியமான அத்தைக்கு இதை அன்பளிப்பாக கொடுக்கலாம். அவர்கள் சந்தோஷ படுவார்கள்!



**எண் குலுக்கல்**

இங்குள்ள மூன்றுபேரில் ஒருத்தரை மாற்றி வையுங்கள். அப்போது அவர் சட்டையில் இருக்கும் எண் மற்றொருவரின் சட்டையின் மேல் உள்ள எண்ணைப் போல் இருமடங்கும், மூன்றாவது நபரின்மேல் உள்ள எண்ணைப்போல் பாதியும் இருக்கவேண்டும்.






HTA 7071

பாரிஸ் மிட்டாய்கள் மற்றும் பிஸ்கட்கள் அனைவரும் விரும்புவது.

# ஆயிரம் ரூபாய் சொல்லி...

**வா**யிற் கதவு தட்டப்பட்டது.

"வரதன் மாமா வந்திருக்காங்க!" என்று கட்டியம் கூறினான் என் கடைசிப் பிள்ளை.

வரதன் என்னுடன் ஆபீஸில் வேலை பார்ப்பவர். சீட்டாட்டம் என்பது அவருக்கு மூச்சு விடுவதை விட முக்கியமானது. சம்பளம் வாங்கின நாள் கூட வீட்டுக்குப் பத்து ரூபாய் கொண்டு போக மாட்டார். அவர் வாங்கியிருந்த பல கடன்களில் ஒரு சிலவற்றிற்குத் தவணை முறையில் பதில் சொல்லவே சரியாகிப் போய் விடும்.

இதுவரை நான் ஒருவன்தான் அவரிடம் மாட்டாதவன். என்னை அவர் பார்க்க வரும்போதெல்லாம் பிடி கொடுக்காமல் எதையாவது பேசி, விலாங்கு மீன் போல் நழுவி விடுவேன்.

வரதன் மாத்திரம் இன்னும் பத்து நிமிஷங்கள் கழித்து வந்திருந்தால் என்னை அவர் பார்த்திருக்க முடியாது. என் பெண் கல்யாண விஷயமாக ஒரு நண்பரைப் பார்க்கப் புறப்பட்டுக்கொண்டிருந்தேன். வீட்டு வாயிற்படி ஏறி வந்து விட்டவரை உதாசீனப்படுத்துவது மனிதத் தன்மை ஆகாது.

"வாங்க, வரதன்!" என்றேன் முகத்தில் ஒரு புன்னகையைத் தருவித்துக் கொண்டு. "என்ன, காப்பி சாப்பிடுகிறீர்களா?" என உபசரித்தேன்.

"உம்! என்றார். "கொஞ்சமாகப் போதும்.. ஸ்டிராங்காக.. பால் தூக்கலாக.." என்றார்.

கதவுக்குப் பின்னால் காத்திருந்த என் மனைவிக்கு ஜாடை மூலம் செய்தியை 'ரிலே' செய்தேன்.

வரதன் நேரடியாக விஷயத்துக்கு வந்தார்.

"ராகவன் ஸார். ஒரு ஆயிரம் ரூபாய் உடனடியாகத் தேவைப்படுகிறது. சின்ன அட்ஜஸ்ட்மெண்ட். நான்கே நாட்களில் பிராவிடண்ட் பண்டில் பணம் எடுத்துத் திருப்பி விடுகிறேன்" என்றார்.

எனக்குத் தெரியும். அவர் பிராவிடண்ட் பண்டு பணத்தில் மிச்சம் அதிகம் வைத்திருக்கவில்லை என்று.

"ஆயிரம் ரூபாயா?! என்னிடம் இப்போது ஆயிரம் பைசா கூடக் கிடையாதே, மிஸ்டர் வரதன்!"

"சும்மா சொல்கிறீர்கள் ஸார்... நான் எங்கே திருப்பிக் கொடுக்க மாட்டேனோ என்ற பயம் உங்களுக்கு.. ரொம்ப முடை ஸார்! என் பெண்டாட்டி தாலியை வேண்டுமானாலும் அடமானமாக வாங்கிக் கொள்ளுங்கள்."

வரதனாவது. அந்தத் தாலியை இத்தனை நாள் விட்டு வைத்திருப்பதாவது!

"சே! சே! வெள்ளிக்கிழமையும் அதுவுமா இப்படியெல்லாம் நீங்கள் பேசலாமா...! என் கையில் பணம் இருந்தால் வஞ்சனையில்லை. என்னை நம்புங்கள், வரதன்!"

"ரொம்ப நெருக்கடி, ராகவன்! பெண் பிரசவத்திற்கு வந்திருக்கிறாள். ஆஸ்பத்திரியில் சேர்த்தாகி விட்டது. நர்ஸிங் ஹோமிற்குப் பணம் கட்ட வேண்டும்" என்றார் தீனமான குரலில்.

"என்ன வரதன்! இத்தனை தூரம் நீங்கள் சொல்ல வேண்டுமா? உங்களுக்கும் எனக்கும் எத்தனை நாட்களாகப் பழக்கம்? உங்கள் நிலைமையை மறைக்காமல் வெளியே சொல்லத் தைரியம் இருக்கிறது. நான் மனத்துக்குள்ளேயே புழுங்கிக் கொள்கிறேன்.. அவ்வளவுதான் வித்தியாசம்.."

வரதன் எழுந்து விட்டார். "உம்.. ரொம்ப நம்பிக்கையுடன் வந்தேன்... பரவாயில்லை.. ஆமாம், ராகவன்! உங்கள் பெண் கல்யாணத்துக்கு வரன் பார்த்துக் கொண்டிருந்தீர்களே...."

"ஆமாம், ஆமாம்... அது விஷயமாகத்தான் இப்போ வெளியே புறப்பட்டுக் கொண்டு இருக்கிறேன். சாதாரணமாகச் செய்தாலே இப்போதெல்லாம் பெரிய ரூபாய் ஒன்றைத் தாண்டி விடுகிறது. சத்திரக்காரனுக்கே ரூபாய் ஐயாயிரம், ஆறாயிரம் என்று தேவைப்படுகிறது. குறைந்தபட்சம் இருபது பவுனாவது கேட்கிறார்கள்.. ஏன், வரதன் உங்களுக்கு யாராவது தெரியுமா...? எங்கேயாவது முப்பதாயிரம் ரூபாய் புரட்டித் தர முடியுமா? இரண்டு வருஷங்களுக்கு மாசா மாசம் வட்டி மாத்திரம் கட்டி விடுகிறேன்... அப்புறம் அசலைக் கொஞ்சம் கொஞ்சமாக..."

"நான் ரொம்பச் சின்னவன் ஸார்! எங்கிட்டப் போய் நீங்க... ...ஆமாம்.. உங்க வீட்டுலே எல்லாம் பெண் பிறந்த நாள் முதல் சேர்த்து வைக்க ஆரம்பித்து விடுவார்களே..."

"அதெல்லாம் அந்தக் காலம்... அன்றாடப் பாடே பெரிதாக இருக்கிறது.. இதில் எங்கே சேர்த்து வைப்பது...? இப்போதைக்குச் சொத்து என்று இருப்பது இந்த வீடு ஒன்றுதான்.. இதை வைத்து ஒரு ஐம்பதாயிரம் புரட்டலாம்.. என் மாமனாரிடம் கொஞ்சம் பண உதவி கேட்டிருக்கிறேன்.. அவர் கையை விரிக்கிறாரோ, தலையை அசைக்கிறாரோ?"

"மெய்யாலும் சொல்றேன்.. நீங்க இப்படி இருப்பீங்கன்னு நான் நினைக்கவேயில்லை... பேச்சுக்குப் பேச்சு சொல்ற



ஜனனி

துண்டு... ராகவன் மாதிரி திட்டம் போட்டுப் பணக் கவலையே இல்லாம இருக்கணும்னு..

"நீங்களொண்ணு.. நித்ய கண்டம் பூர்ண ஆயுசுதான். அபராதம் இல்லாமே இதுவரைக்கும் ஒரு தரம்கூட என் பையனுக்குக் காலேஜ் பீஸ் கட்டியதில்லை... முன் பணம் கட்டிப் பால் கார்டு வாங்க முடியாமே ஒரு தண்ணிப் பால்காரன் கிட்டத்தான் பாலே வாங்குகிறோம்...! எங்கப்பா விட்டுப் போன சொத்து இந்த வீடு... வாடகைப் பணம் மட்டும் மிச்சம்."

என் கடைசிப் பையன் காப்பி எடுத்து வந்தான்.

"உட்கார்ந்து காப்பி சாப்பிட்டு விட்டுப் போங்கள்..." என உபசரித்தேன்.

"காப்பி நன்றாக இருக்கிறது ராகவன்!" என்றார்.

"வராதவர் வந்திருக்கிறீர்கள்.. நல்லதா, சத்தா வேண்டாமா...? நாளைக்கு மோரில் இரண்டு தம்ளர் தண்ணீர் கூடக் கலந்து விடுவாள்..."

புறப்பட்ட வரதன் திரும்பினார். "ரொம்ப முடையாக இருந்தால் கூச்சப்படாமல் என்னிடம் கேளுங்கள், ராகவன்... ஐம்பது, நூறு என்னால் புரட்ட முடியும்."

நான் லேசாக அதிர்ந்து போனேன். வரதன் போன பிறகு

கீதா என்னை மொலு மொலுவென்று பிடித்துக் கொண்டாள்.

''எதற்கு இப்படி இல்லைப் பாட்டு...? ஓஹோன்னு இல்லா விட்டாலும் போதிய அளவு ஆண்டவன் கொடுத்திருக்கும் போது...''

''உனக்குத் தெரியாது... அந்த ஆள் கிட்டப் பணத்தைக் கொடுப்பதும் நெருப்பிலே போடுவதும் ஒன்றுதான்... திரும்பி வராது!'' என்றேன்.

அன்று தொடர்ந்து மறுபடி மறுபடி விருந்தினர்கள்.. தொடர்ந்து ஏதோ ஏதோ தவிர்க்க முடியாத அலுவல்கள். நான் நினைத்த இடத்துக்குப் பத்து நாட்கள் கழித்துத்தான் போக முடிந்தது.

**''வா**ருங்கள் ராகவன்.. பத்து நாட்கள் முன்பே உங்களை நான் எதிர்பார்த்தேன்'' என வரவேற்றார் அந்தப் பெரிய மனிதர்.

அவருடைய தமக்கை பிள்ளைக்குத்தான் என் பெண்ணைப் பேசியிருந்தது. ஜாதகங்கள் பொருந்தியிருந்தன. பெண்ணுக்கும் பிள்ளைக்கும் கூடச் சம்மதம். லௌகீகம் மட்டும்தான் பேச வேண்டும்.

''ஊரிலிருந்து ஏதாவது தகவல் வந்ததா?'' என விசாரித்தேன்.

''உம்.. என் அத்தானே வந்திருந்தார்... வரும்போது ரொம்பவும் உற்சாகமாக இருந்தார்... நானும் அவரும் உங்களைப் பார்க்க வரலாமென்று இருந்தோம். திடீரென்று மனம் மாறி விட்டார்... இந்தச் சம்பந்தத்தில் அக்கறை இருப்பதாகத் தெரியவில்லை.. ஐ ஆம் ஸாரி.''

நான் பதறிப் போனேன்...

''ஏன் ஸார், என்ன காரணம்?''

''எனக்குத் தெரியாது ராகவன்.. உங்கள் ஆபீஸில் வரதன் என்று ஒருவர் இருக்கிறாரா?''

''ஆமாம்.''

''அவரும் என் அத்தானும் ஒரே ஊர்.. ஒன்றாகப் படித்தவர்கள்.. ரொம்ப நெருக்கம்... அவர் வந்து பேசிய பிறகுதான் அத்தான் மனம் மாறிப் போனதாக எனக்குப் படுகிறது... நீங்கள் வேண்டுமானால் அந்த வரதனை விசாரிக்கிறீர்களா?''

என்னவென்று விசாரிப்பேன்...? என் 'இயலாமை'யை நான் பட்டியல் போட்டுக் காட்ட, அதை அவர் தன் நண்பரிடம் பாடம் ஒப்பித்திருப்பார்.

என் மனைவியிடம் என்ன, எப்படிச் சொல்வது எனப் புரியாமல் மனம் குழம்பியவாறு திரும்பினேன்!

## அருள் வாக்கு

எல்லா தானங்களிலும் அன்ன தானம் விசேஷம். பகவானும் கீதையில் எவன் தனக்காக மட்டும் ஆஹாரம் தேடிச் சாப்பிட்டுக் கொள்கிறானோ அவனுடைய பாபத்தை முழுக்க அவனேதான் அனுபவித்தாக வேண்டும்; வேறு யாரும் அதில் பங்கு எடுத்துக் கொள்ள மாட்டார்கள் என்கிறார். பிறனுக்குப் போடாமல் தான் மட்டுமே தின்கிறவன் சாதம் சாப்பிடவில்லை, பாபத்தையே புசிக்கிறான் என்கிற மாதிரிச் சொல்கிறார்.



அன்னதானத்துக்கு என்ன விசேஷம் என்றால் இதிலேதான் ஒருத்தரைப் பூர்ணமாகத் திருப்திப்படுத்த முடியும். பணம், காசு, வஸ்த்ரம், நகை, பூமி, வீடு இந்த மாதிரியானவற்றை எவ்வளவு கொடுத்தாலும் வாங்கிக் கொள்கிறவன் அதற்கு மேல் தந்தாலும் 'வேண்டாம்' என்று சொல்ல மாட்டான். அன்னம் போடுகிற போதுதான் ஒருத்தன் என்னதான் முட்ட முட்டச் சாப்பிட்டாலும் ஓர் அளவுக்கு மேல் சாப்பிட முடியாது. 'த்ருப்தோஸ்மி; போதும்' என்று சொல்கிறான். ஓர் அளவுக்கு மேல் போய்விட்டால் 'ஐயையோ! இனிமேல் போடாதீர்கள்' என்று மன்றாடவும் செய்கிறான். இம்மாதிரி ஒருத்தன் பூர்ண மனஸோடு திருப்தி தெரிவிக்கிற போதுதான் தாதாவுக்கும் தானத்தின் பலன் பூர்ணமாகக் கிடைக்கும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

# முன்னேற்றப் பாதையின் முதல் படி !

இப்போது முதல் அவனது சிறந்த வழிகாட்டி நீங்களே!

உங்கள் குழந்தை முதல் அடியெடுத்து நடக்கத் துவங்கும்போதே
அவன் வருங்காலத்தைப்பற்றித் திட்டமிட துவங்குங்கள்.

அவனது கல்வி, பயிற்சி மற்றும் எதிர்கால நல்வாழ்வின் பாதுகாப்புக்கு
இன்றே சேமியுங்கள். அவனது தேவைகளுக்கு ஏற்ப உங்கள் சிறு சேமிப்புகள்
பன்மடங்கு பெருக நாங்கள் உதவுகிறோம்.

- சேமிப்புக் கணக்குகள்
- மாதாந்திர சேமிப்புத் திட்டங்கள்
- ரொக்கச் சான்றிதழ்கள்
- வாமன விஸ்வரூப திட்டம்
- நிரந்தர இட்டு வைப்புகள்
- குடிபெயர்ந்தோர் கணக்குகள்
- மற்றும் உங்கள் தேவைக் கேற்ற எண்ணற்ற சேமிப்புத் திட்டங்கள் உள்ளன.




CUB

சிட்டி யூனியன் பாங்க் லிட்.,

பதிவு அலுவலகம்: கும்பகோணம்-612 001.

CUB—உங்கள் வளர்ச்சிக்கேற்ற வங்கி.

MCS/CUB/274

கமிஷனர் ஹில் டெலிபோனில் நிதானித்தார்.

"மிஸ்டர் பூபேஷ்! இந்த விஷயமாய் டெலிபோன்ல பேசறது அவ்வளவு உசிதமில்லை. நீங்கள் இப்போது ஓய்வாக இருந்தால் என்னுடைய அலுவலகம் வரைக்கும் வந்துவிட்டுப் போக முடியுமா...?"

"இன்னும் அரை மணி நேரத்தில் அங்கே இருப்பேன்..."

"ப்ளீஸ்..."

பூபேஷ் சொன்னபடியே அரைமணி நேரத்தில் கமிஷனர் ஹில்லின் முன்னால் உட்கார்ந்திருந்தார். ஓவல் வடிவ சட்டி மர மேஜைக்கு இருபக்கமும், பிரகாசமான நிறத்தோடு, நட்சத்திரப் பட்டை தாங்கிய போலீஸ் அதிகாரிகள், பொம்மைகள் மாதிரி நேர் பார்வை பார்த்துக் கொண்டு தெரிய — கமிஷனர் தன் பெரிய நரை மீசைக்குக் கீழே உதடுகளை அசைத்தார்.

"மிஸ்டர் பூபேஷ்! விளையாட்டு வீரர்களை வரவேற்க வந்த கும்பலில் பத்து சதவீதப் பேர் கைகளில் பொக்கேக்களை வைத்திருந்தார்கள். வீரர்கள் ஏர்போர்ட் லௌஞ்சிற்கு வந்ததும் — பொக்கேக்களை அவர்களுடைய கைகளில் திணித்தார்கள். சிலர் அவர்கள் காரில் பயணப்பட்ட போது — இறக்கப்பட்ட கண்ணாடிக் கதவுகள் வழியே உள்ளே திணித்தார்கள். இந்தக் காட்சிகளை நீங்களும் பார்த்திருக்கலாம்..."

"பார்த்தேன்..."

"ஹாக்கி கோச் குருதேவ் சிங்கும், குழு காப்டன் உத்தமும், அம்பாசிடர் காரில் ஏறிய போதும் இந்த பொக்கேக்கள் திணிக்கப்பட்டிருக்கலாம்..."

"மே... பி..."

"இப்படி பொக்கேக்களைத் திணித்தவர்கள் யார் யார் என்பதைக் கண்டுபிடிக்க ஓர் உபாயம் இருக்கிறது."

"சொல்லுங்கள்."

"விளையாட்டு வீரர்களின் வரவேற்பு நிகழ்ச்சியை 'வீடியோ கவரேஜ்' செய்யும் பொறுப்பை யாரிடம் ஒப்படைத்திருந்தீர்கள் என்பதைச் சொல்ல முடியுமா?"

பூபேஷ் யோசித்து — "வீடியோ ட்ராக் கம்பெனியிடம்..." என்றார்.

"கவரேஜ் செய்த நபர் யார்?"

"மிஸ்டர் கோர்டே."

"கோர்டே கவரேஜ் செய்த வீடியோ பிலிமை, டீ. வி. திரையில் ஓட்டிப் பார்த்தால், கைகளில் பொக்கேக்களுடன் யார் யார் இருந்தார்கள் என்பதை லிஸ்ட் செய்து விடலாம். குறிப்பாக உத்தம், குருதேவ்சிங் ஏறிய அம்பாசிடர் காரில் — பொக்கேக்களைத் திணித்தவர்கள் யார் என்பதை மிகச் சுலபமாகத் தெரிந்து கொள்ளலாம்."

கமிஷனர் ஹில் சொல்லச் சொல்ல — பூபேஷ் தன் அகலமான முகத்தில் விஸ்தாரமாய் மலர்ந்தார். "யூ... ஆர்... கரெக்ட் ஸார். எனக்கு இந்த யோசனை தோன்றவில்லை..."

"வீடியோ ட்ராக் மிஸ்டர் கோர்டேயை நீங்கள் உடனடியாய்த் தொடர்பு கொண்டு — ஏர்போர்ட் நிகழ்ச்சியை கவரேஜ் செய்த வீடியோ காஸெட்டோடு இங்கே வரவழைக்க வேண்டும்..."

"நான் இந்த டெலிபோனை உபயோகப் படுத்திக் கொள்ளலாமா?"

"வித் ப்ளஷர்," — கமிஷனர் ஹில் தனக்கு அருகில் இருந்த டெலிபோனை பூபேஷ் பக்கமாய் நகர்த்தினார். பூபேஷ் ரிஸீவரை எடுத்துக் காதுக்குக் கொடுத்துக் கொண்டே, டயலில் எண்களைச் சுழற்றி விட்டு, அரை நிமிஷ நேரம் காத்திருந்து — மறுமுனை உயிர் பெற்றதும் மெல்லிய குரலில் பேச ஆரம்பித்தார்.

"மிஸ்டர் கோர்டே."

"......"

"நான் பூபேஷ்."

"......"

"ஆமாம்! நடந்த சம்பவம் மிகவும் மோசமானதுதான். அதைப் பற்றிய விசாரணையில்தான் தீவிரமாக இறங்கியுள்ளேன். அது சம்பந்தமாய் உங்கள் உதவியும் எனக்குத் தேவைப்படுகிறது."

"......"

"ஏர்போர்ட்டில் வீரர்களின் வரவேற்பு நிகழ்ச்சியை வீடியோ கவரேஜ் செய்தீர்கள் அல்லவா? அந்த கேஸட்டோடு உடனடியாய் நீங்கள் கமிஷனர் அலுவலகத்திற்கு வர வேண்டும்."

"......"

"ஆமாம்... இப்போதே...!"

"......"

"எட்டு மணிக்கு வருகிறீர்களா? வாருங்கள். நானும் கமிஷனரும் இன்னும் சில அதிகாரிகளும் உங்களுக்காகவே காத்திருக்கிறோம்..."

பேசிவிட்டு ரிஸீவரை வைத்தார் பூபேஷ்.

இன்று இறப்பு விழா

பைப்பில் புகையிலையை அடைத்துக் கொண்டிருந்த — கமிஷனரை ஏறிட்டார்.

''கோர்டே எட்டு மணிக்கு ஏர்போர்ட் வரவேற்பு நிகழ்ச்சி சம்பந்தப்பட்ட கேஸட்டோடு வருவார்...''

எல்லோரும் காத்திருந்தார்கள்.

**வி**நாடிகளைத் தின்று, நிமிஷங்கள் புஷ்டியாய் வளர்ந்து, நேரம் எட்டரையைத் தொட்ட போது கமிஷனர் ஹில் தம் கெட்டியான மோவாயை அவஸ்தையோடு தேய்த்தார்.

''மிஸ்டர் கோர்டேயை இன்னமும் காணோமே பூபேஷ்? அவர் எந்த ஏரியாவிலிருந்து வரவேண்டும்?''

''தாதர்...''

''தாதர்தானே...? சொன்ன நேரத்திற்குள் இங்கே வந்து சேர்ந்திருக்கலாமே? அவரிடம் இருப்பது டூ வீலரா...? ஃபோர் வீலரா...?''

''ஃபோர் வீலர். பழைய ஸ்டாண்டர்ட் கார்...''

''மறுபடியும் போன் செய்து பாருங்கள்.''

பூபேஷ் ரிஸீவரை எடுத்து — கோர்டேயின் எண்களைச் சுழற்றினார். மறுமுனையில் ஒரு பெண் குரல் கேட்டது.

''கோன் சாஹிபே...?''

''மிஸ்டர் கோர்டே...?''

''பாத் க்யா...?''

இந்தியில் — பூபேஷ் கேட்டார். ''பேசுகிற நீங்கள் யார் என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?''

''நான் அவருடைய மனைவி...''

''மிஸஸ் கோர்டே! நான் ஒலிம்பிக் விளையாட்டுக்குழுத் தலைவர் பூபேஷ் பேசுகிறேன். உங்கள் கணவருக்கு ஏழு மணியளவில் டெலிபோன் செய்து — இங்கே கமிஷனர் அலுவலகத்துக்குவரும்படி சொல்லியிருந்தேன்...''





அவர்: லாட்டரி பரிசு விழுந்த அதிர்ச்சி யிலே டக்கென்று போய் விட்டார்...

இவர்: யாரு, பரிசு அடித்தவரா?

அவர்: ஊஹூம், அவருக்குக் கடன் கொடுத்தவர்!

— கே. பி. பாஸ்கர்.

நண்பர்: அதுதான் படத்தை எடுத்து முடிச் சுட்டீங்களே: இன்னும் என்ன யோசனை...?

தயாரிப்பாளர்: 'கதை—வசனம்' எழுதிக் கிட்டு வர்றேன்னு அட்வான்ஸ் வாங் கிட்டுப் போன கதாசிரியர் என்ன ஆனாருன்னே தெரியலையே...?

— கரடிகுளம் ஜெயா பாரதிப்ரியா.



''உங்களைப் பார்க்கத்தான் கேஸட்டு களோடு புறப்பட்டாரே....?''

''எத்தனை மணிக்குப் புறப்பட்டார்...?''

''ஏழரை மணி இருக்கும்...''

''எதில் புறப்பட்டார்...?''

''காரில்தான்...''

''இப்போது மணி எட்டு முப்பத்தைந்து. தாதரிலிருந்து இங்கு வர மீறிப் போனால்... இருபது நிமிஷம்தான் ஆகும்... அவர் இன்னமும் இங்கே வந்து சேரவில்லையே!

''போக்குவரத்து நெரிசலில் மாட்டியிருப் பார்... எப்படியும் வந்து சேர்ந்து விடு வார்...'' — மிஸஸ் கோர்டே கொஞ்சம் கூடப் பதற்றப்படாமல் — கவலைப்படாமல் சொல்லி விட்டு ரிஸீவரைக் கவிழ்த்த அதே விநாடி —

கமிஷனர் ஹில்லுக்குப் பக்கத்திலிருந்த டெலிபோன் அடித்தது. ஹில் ரிஸீவரை எடுத்து இடது காதுக்குக் கொடுத்தார்.

''எஸ்...''

''போலீஸ் கமிஷனர்?'' ஓர் உப்புக் காகிதக் குரல் கேட்டது.

''ஸ்பீக்கிங்.''

உடனே மறுமுனை குரல், பேச்சு வழக்கில் உள்ள இந்தியும் மராட்டியும் கலந்த ஒரு மொழிக்குத் தாவியது.

''வீடியோ ட்ராக் கோர்டேவுக்காகக் காத்திட்டிருக்கீங்களா கமிஷனர் ஸார்?''

''யார் பேசறது...?''

''விஷயத்தை மட்டும் கேளுங்க... என்னை யார்ன்னு தெரிஞ்சுக்க விருப்பப் படாதீங்க... கோர்டே உங்களைத் தேடி வர மாட்டார். நீங்கதான் அவரைத் தேடிக்கிட்டுப் போகணும்...''

''கோர்டே இப்போ எங்கே...?''

''சொல்றேன்... கவனமா கேட்டுக்குங்க... கமிஷனர் ஸார்...! மாதுங்கா சயான் ரோட்ல.... ஜெம்ஸ் மேன்ஷன் தெரியுமா?''

''தெரியும்... சொல்லு....''

''அந்த மேன்ஷனையொட்டி ஒரு சின்ன கல்லி பிரியும். கொஞ்சம் பலான வேலையெல்லாம் நடக்கிற சந்து. அந்த சந்துல மிஸ்டர் கோர்டே உங்களுக்காக... அவ ரோட கார்ல காத்திட்டிருப்பார். சிரமம் பார்க்காமே வந்து கூட்டிக்கிட்டுப் போயிட றீங்களா?''

அவன் பேசிக் கொண்டிருக்கும்போதே — கமிஷனர் — பால் பாயிண்ட் பேனாவை பிதுக்கி ஒரு பேப்பரில் — **Trace the Line Contact Exchange'** — கிறுக்கலாய் வாசகங்களை எழுதி — அருகே உட்கார்ந்திருந்த போலீஸ் அதிகாரியிடம் நீட்ட — அவர் அதை வாங்கிக் கொண்டு பக்கத்து அறைக்கு ஓடினார்.

கமிஷனர் ஹில் டெலிபோன் பேர்வழியிடம் பேச்சை நீட்டிக்க விரும்பினார். ''அந்த கல்லி எங்கே இருக்குன்னு சொன்னே...?''

''ஸாரி... கமிஷனர்... ஸார்! எனக்கு எதையுமே ஒரு தடவை சொல்லித்தான் பழக்கம்.''

சொல்லிவிட்டு, 'தட்'டென்று ரிஸீவரை வைத்தான் அவன். டெலிபோனின் மறுமுனை 'கொர்ர்' என்று கத்த — கமிஷனர் ஹில் தன் விஸ்தாரமான நெற்றியில் 'பொல்'லென்று வியர்த்துப் போயிருந்தார்.

பூபேஷ் சிறிது பதைப்போடு கேட்டார். ''எனிதிங்க் ராங் ஸார்?''

''எஸ்... கோர்டேவுக்கு ஏதோ ஆபத்து... நாம் உடனடியாய் சயான் மாதுங்கா ரோட்டுக்குப் போக வேண்டும்...''

தலையில் தொப்பியைப் பொருத்திக் கொண்டு கமிஷனர் எழ, பூபேஷும் எழுந்தார். எல்லோரும் போர்டிகோவுக்கு வந்தார்கள்.

அலுவலக வாசலில் காத்திருந்த ஜீப் — கமிஷனரின் வேகமான நடையைப் பார்த்ததுமே — உடம்பை உதறிக் கொள்ள ஆரம்பித்தது.

ஜெம்ஸ் மேன்ஷனிலிருந்து — இடது கை பக்கமாய்ப் பிரியும் அந்த இருட்டான சந்துக்குள் ஜீப் பிரகாசமான ஹெட்லைட் வெளிச்சத்தோடு நுழைந்த போது — அங்கே கடுமையான நிசப்தம். ஒரு மக்கடையும் ஒரு பீடாக் கடையும் மட்டுமே உயிரோடு இருந்தன. நைலக்ஸ் சேலையிலும், மலிவான

பௌடர் பூச்சிலும் சந்து முனையில் காத்திருந்த பெண்கள், போலீஸ் ஜீப்பைப் பார்த்ததும் அந்தர்த்யானமானார்கள். சாராயம் விற்றுக் கொண்டிருந்த டீக்கடை ஒரு ராணுவ அவசரத்தோடு சாத்தப்பட்டது. கஞ்சா விற்றுக் கொண்டிருந்த பீடாவாலா பதுங்க இடம் தேடினான்.

அவர்களைச் சட்டை செய்யாமல் ஜீப் நேராகப் போயிற்று. சந்து முடியப் போகிற தருணத்தில் — பம்பாய் கார்ப்பரேஷனின் சிமெண்ட் தொட்டிக்குப் பின்னால் — அந்த ஸ்டாண்டர்ட் கார் நின்றிருப்பது.... தெரிந்தது.

ஜீப் நின்று உடம்பின் உதறலை நிறுத்திக் கொள்ள — கமிஷனர் ஹில்லும், இரண்டு போலீஸ் அதிகாரிகளும் கீழே குதித்தார்கள். பூபேஷ் தொடர்ந்தார்.

காரை நெருங்கி மொய்த்து, உள்ளே பார்த்தார்கள்.

பின் சீட்டில் —

யாரோ குப்புறப்படுத்திருந்தார்கள்.

கமிஷனர் தன் கர்ச்சீப்பை உபயோகப்படுத்தி — கார்க் கதவின் கைப்பிடியைப் பற்றித் திறந்தார். போலீஸ் அதிகாரி ஒருவர் பென் டார்ச்சை உபயோகப்படுத்தி — காருக்குள் வெளிச்சத்தை நிரப்பினார்.

"பூபேஷ்! பாருங்கள். இவர்தான் கோர்டேவா...?"

பூபேஷ் பார்த்து விட்டுத் தலையாட்டினார்.

"இவர்தான் ஸார்..."

ஹில் காருக்குள் நுழைந்து கோர்டேவை மல்லாத்தினார். நாசித் துவாரங்களில் தன் புறங்கையை வைத்தார்.

மூச்சு நடுக்கமாய் வந்தது.

"ஆள் உயிரோடு இருக்கிறார். காருக்குள் மயக்க மருந்தை ஸ்ப்ரே பண்ணியிருப்பார்கள் போலிருக்கிறது. அழுகிப் போன பழ நெடி அடிக்கிறது."

இரண்டு அதிகாரிகள் கோர்டேவை ஜீப்புக்குக் கொண்டு போக — ஹில் சீட்டுக்கடியில் டார்ச் வெளிச்சத்தைப் பாய்ச்சினார். கீழே —

சாக்லேட் வண்ணத்தில் ஒரு ப்ரீப்கேஸ்.

அதன் லாக்கர்களை விடுவித்தார் ஹில். திறந்தார்.

உள்ளே —

பாலிதீன் பேப்பரில் சுற்றப்பட்ட — இரண்டு வீடியோ காஸெட்கள்... அடைகாக்கப்பட்டு தெரிய — அதன் நெற்றிகளில் டைப் அடிக்கப்பட்ட — இரண்டு வரி இந்தி வாக்கியம் ஒட்டப்பட்டிருந்தது.

காஸெட்டுகளைப் போட்டுப் பாருங்கள்
நாங்கள் யார் என்பது புரியும்!

கமிஷனர் ஹில் ஈரம் காய்ந்து போன உதடுகளோடு நிமிர்ந்தார். பார்வையை அதிர்ச்சியோடு நாலா பக்கமும் தூரத்தினார்.

கார் நின்றிருந்த இடத்திற்கு வலது பக்கமாய்ப் பார்வை திரும்பிய போது ஒரு மாடி வீட்டின் வெளிச்சமான பால்கனியில் மதில் சுவரைப் பிடித்தபடி — இங்கேயே பார்த்துக் கொண்டிருந்த அந்தப் பெண் தெரிந்தாள்.

கமிஷனர் பார்த்து விட்டார் என்று தெரிந்ததும் —

அவள் வேகமாக உள்ளே போனாள்.

(தொடரும்)



# பதினெட்டில் வாக்குரிமை!

—இதனைச் சட்டமாக்கவேண்டும் என்று ஆளுங்கட்சி முயற்சி செய்து வருகையில் 18—21 வயதினரான ஜெயஸ்ரீ, மேரிரோஸ் பூங்கோதை, சஞ்சய், ஹரி ஆகியோரை கல்கி அலுவலகத்துக்கு அழைத்துக் கருத்துக் கேட்டோம்....



ஹரி: காங்கிரஸ் செயற்குழு ஆலோசித்து, வாக்குரிமை பெறும் வயதைப் பதினெட்டாகக் குறைக்க வேண்டும் என்று சமீபத்தில் சிபாரிசு செய்துள்ளது. ஆனால் இந்த யோசனை ஏற்கெனவே எதிர்க் கட்சிகள் பலவும் கூறியதுதான். மேலும் தேர்தல் சீர்திருத்தங்களை ஆராய்ந்து பரிந்துரைக்க அமைக்கப்பட்ட நாடாளுமன்ற கூட்டுக் கமிட்டி 1971—இலேயே, வாக்குரிமை வயதைக் குறைப்பதுடன், எலெக்ட்ரானிக் முறையில் வாக்குப் பதிவுகள் நடைபெற வேண்டும் என்றும் வாக்காளர்களுக்கு அடையாள அட்டைகள் வழங்கப்பட வேண்டும் என்றும் சிபாரிசு செய்துள்ளது. எனவே இந்த சிந்தனை இந்திய அரசியல் வானில் ஒரு பிரமாதமான புதிய யோசனை என்று சொல்லிவிட முடியாது. கர்நாடக முதல்வராக இருந்த ஹெக்டே '83—84 லிலேயே ஜில்லா, பஞ்சாயத்துத் தேர்தல்களுக்கு வாக்குரிமை வயதைப் பதினெட்டாகக் குறைத்திருக்கிறார்.

சஞ்சய்: இது என்னவோ அரசியல் நோக்கங்களுடன் பேசப்படும் மாற்றமாகவே எனக்குத் தோன்றுகிறது. ஆளும் கட்சிக்கு ஏகப்பட்ட அவப் பெயர், பிரச்னைகள்... சமீபத்தில் விவசாயிகள் போராட்டம் பெருமளவு வெற்றியடைந்துள்ளது; இதனால் தங்களை வலிமைப்படுத்திக் கொள்வதற்காகவே இளைஞர்களுக்கு வாக்குரிமை கொடுப்பது குறித்து ஆளுங்கட்சி பேசி வருவதாகத் தோன்றுகிறது... இளைஞர்களை எளிதில் தங்கள் வசமாக்கிக் கொள்ள முடியும் என்ற நம்பிக்கையில் இந்த முயற்சியில் இறங்கியிருக்கிறார்கள்... என்னைக் கேட்டால் பதினெட்டில் வாக்குரிமை வழங்கப்படக் கூடாது என்பேன். 18—21 வயதினர் பெரும்பாலும் கல்லூரி மாணவர்கள் தான். ஏற்கெனவே கல்லூரிக்குள்ளேயும், கல்லூரிகளுக்கிடையேயும் அரசியல் காரணமாகக் கலவரங்களும் பூசல்களும் நடந்து வருகின்றன. மாணவர் தலைவர் தேர்தலில் அரசியல் கட்சிகளின் தலையீடும் பண பலமும் இருப்பது கண்கூடு. இந்நிலையில் வாக்குரிமையும் தரப்பட்டால் மாணவர்களிடையே பகையுணர்வுதான் வளரும். படிப்பில் கவனமே செல்லாது, சிதறும். கல்லூரிகளில் அரசியல்வாதிகளின், அரசியலின் ஆதிக்கம் அதிகமாகும். கருத்தூன்றிப் படிக்க வேண்டிய ஆண்டுகள் பாழாகும். மேலும், இந்த வயதில் இளைஞர்கள் முழு மன முதிர்ச்சி அடைந்து, மன உறுதி பெறுவதில்லை. இவர்கள் எப்படி நாட்டுக்கு எது நல்லது என்பதை முடிவு செய்ய முடியும்...?

பூங்கோதை: ஆமாம், அரசியல்வாதிகள் பகட்டு வார்த்தைகள் பேசி வாக்குறுதிகளை வீசினால் இளைஞர்களும் அதை நம்பி வாக்களித்து விடுவார்கள். அரசியலில் குதித்தும் விடுவார்கள். ஏதேனும் போராட்டமென்றால் அடிபடுவதும் இவர்கள்தான்.

ஜெயஸ்ரீ: கல்வி வாய்ப்பு பெறும் மாணவர்களை அரசியலில் இழுத்து ஏமாற்ற



முடியுமென்றால் படிப்பறிவு இல்லாத எளியவர்களைச் சினிமா என்ற மாயையைக் காட்டி ஏமாற்றி விடுவார்கள். இப்போது தான் கட்சிக்கொரு நடிகர் பிரசாரம் செய்கிறாரே... சினிமாதான் வாழ்க்கை என்று நம்பும் அப்பாவி இளைஞர்கள் எப்படி சிறந்த பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்க முடியும்...?

ஹரி: நாம் அவநம்பிக்கையுடன் இந்த மாற்றத்தை அணுகக் கூடாது என்று நான் நினைக்கிறேன். வெறும் சடங்காக எண்ணி வோட்டுப் போடாமல், ஒரு பொறுப்புணர்ச்சியுடன் வோட்டுப் போட்டால் இந்த மாற்றத்தால் புதிதாக வாக்குரிமை பெறும் சுமார் 4.5 கோடி வாக்காளர்களால் இந்திய அரசியலில் ஒரு நல்ல திருப்பத்தைக் கொண்டு வர முடியும் என்று நினைக்கிறேன். நமக்கு மனமுதிர்ச்சி இல்லை என்று நாமே குறைத்து மதிப்பிட்டுக் கொள்ளாமல் பிற இளைஞர்களையும் சிந்தித்துச் செயல்படச் செய்ய வேண்டும். ஆனால் ஒன்று... பண பலமும் லஞ்ச ஊழலும் அரசியலில் ஏற்கெனவே புரையோடியிருக்கின்றன. இவை நம் வட்டத்துக்குள் நுழையாமல் காக்க முடியுமானால் நன்றாக இருக்கும்.

கல்கி: இந்தத் தேர்தல் சீர்திருத்தத்தின் மூலம் இந்தத் தீமைகளை ஒழிக்க முடியும் என்று நினைக்கிறீர்களா...?

ஹரி: இல்லை, முழுவதுமாக ஒழிக்க முடியாது. ஆனால் இளைஞர்களாகிய நாமும் அரசியல்வாதிகளின் ஆசை காட்டலில் மயங்கி அவர்கள் போக்கில் போகாமல் நேர்மையாகவும் லட்சிய உணர்வோடும் இருந்தால் வோட்டுரிமை நம்மிடம் இருப்பதால் அவர்கள் நமக்குப் பயந்து நடப்பார்கள். ஓரளவுக்கேனும் திருந்துவார்கள். இளைஞர்களுக்கு உள்ள பிரச்னைகளிலும் கவனம் செலுத்துவார்கள். ஒரு குறிப்பிட்ட கல்லூரி மாணவர்கள் பல்லவன் பஸ்கள் மீது கல்லெறிவதற்குப் பெயர் போனவர்கள்... இந்த மாணவர்கள்தான் 'பஸ் தினம்'



இடமிருந்து வலமாக — ஜெயஸ்ரீ, பூங்கோதை, சஞ்சய், ஹரி.

என்று எல்லா பஸ்களுக்கும் கொண்டாடு கிறார்கள். இதிலிருந்து தெரியவில்லையா மாணவர்கள் இயல்பாக நல்லவர்கள். ஆனால் அரசியல் சுயநலங்களுக்குப் பலி யாகிறார்கள். அதை அவர்கள் அனுமதிக்கா மலிருந்தால் வாக்குரிமையைக் கொண்டு நல்ல பலன்களைப் பெறலாம்.

சஞ்சய்: பதினெட்டு முதல் இருபத்தோரு வயதிலான பருவம், ஒருவன் தன் வாழ்க் கையை எப்படி அமைத்துக் கொள்ள வேண்டும் என்பதை முடிவெடுக்கும் பருவம். அந்த முடிவை எடுத்த பிறகு அவன் பட்டம் பெற்று, ஒரு வேலை தேடிக் கொண்டு, சம்பாதித்து, வரி செலுத்த ஆரம் பிக்கும் பொழுதுதான் அரசியலில் நேரடி யாக ஈடுபடலாம்.

கல்கி: வாழ்க்கை எல்லோருக்கும் அவ் வளவு சுலபமாக அமைந்துவிடுவதில்லை... நீங்கள் சொல்லும் கல்வி வாய்ப்பு, வேலை வாய்ப்பு, போன்றவற்றைப் பெறாத ஏராள மானவர்கள் என்ன செய்வது...?

சஞ்சய்: இத்தகையவர்கள், பெரும் பாலும், தங்கள் வட்டாரத்தில் எந்தத் 'தலை வர்' 'வலிமை' வாய்ந்தவராய், கவர்ந்திழுப் பவராய், இருக்கிறாரோ அந்தத் தலைவர் பக்கமே சரிவார்கள். கபடமற்ற இவர்கள், நம்பிக் கெடுகிறார்கள்... கட்சித் தலைவர் களோ பணத்துக்காகவும் பதவிக்காகவும் மக்களைப் பணயம் வைக்கிறார்கள். அவர் களைப் பலவிதங்களிலும் ஏமாற்றுகிறார் கள். இந்தச் சகதியில் மாணவர்களும் சிக்கிக் கொள்ள வேண்டுமா...?

ஜெயஸ்ரீ: பதினெட்டில் வாக்குரிமை என்று வந்து விட்டால் அரசியல்வாதிகள் முதலில் மாணவர்களைத்தான் வளைத்துப் போடப் பார்ப்பார்கள். அதனால் அவர் களுக்குத்தான் ஆதாயம் இருக்குமே தவிர நமக்கு எதுவும் இருக்காது...

கல்கி: இளைஞர்கள் வேகமும் துடிப்பும் கொண்டவர்கள். குடும்பம், வருமானம் என்ற பொறுப்புகளைப் பற்றிய கவலை களால் அழுத்தப்படாதவர்கள். அதனால் சுயநலத்துக்காகக் கொள்கைகளை இலட்சி யங்களை, விட்டுக் கொடுக்கும் அவசியம் அவர்களுக்குக் கிடையாது... ஆகையால் அவர்களுக்கு வாக்குரிமை தரப்பட்டால் அவர்கள் தேர்ந்தெடுக்கும் பிரதிநிதிகளைத் தட்டிக் கேட்பார்கள் என்று உங்களுக்குத் தோன்றவில்லையா?

ஜெயஸ்ரீ: கடைசிவரை போராடிக் கொண்டே இருந்தாலும் எதுவும் மாறாது...

பூங்கோதை: பதவியில் உள்ளவர்களை தட்டிக் கேட்பது அல்லது பதவியிலிருந்து இறக்குவது என்பது நடக்காத காரியம். ஒன்று அவர்களுடைய பணபலத்துக்குக் கட்டுப்பட்டு அவர்களுடைய கைப்பாவை யாக மாறணும் இல்லாவிட்டால் ஆள் பலத் துக்குக் கட்டுப்பட்டு அடங்கிப் போகணும். இதுதான் இன்று யதார்த்த நிலை.

ஹரி: நடுத்தர வர்க்க வாக்காளர்கள் நம்பிக்கை இழந்து அரசியலே வியர்த்தம் என்ற முடிவுக்கு வந்து விட்டார்கள். ஏழை மக்களோ, பெரும்பாலும் அறியாமையால் அரசியல் தந்திரங்களுக்குப் பலியாகிறார் கள். இந்தச் சூழ்நிலையில் நமக்கு வாக்குரிமை தரப்பட்டாலும் அதை நாம் சாமர்த்தியமா கப் பயன்படுத்தினாலும் அரசியல் நிலவரம் மாறாது. தார்மீக உணர்வோடு ராஜினாமா செய்யும் அரசியல்வாதிகள் எல்லாம் இந்தி யாவில் கிடையாது.

சஞ்சய்: அரசியல் என்பதே மோசடியைக் குறிக்கும் ஒரு தீய சொல்லாக ஆகி விட்டது.

ஒருவர் பதவியேற்றதும் இரண்டே நோக்கங்களுடன்தான் செயல்படுகிறார். ஒன்று பதவியைத் தக்க வைத்துக் கொள்வது; இரண்டு பதவிக் காலத்தில் தம்மை எல்லா விதங்களிலும் மேம்படுத்திக் கொள்வது...

ஹரி: மாணவிகள் என்ன அபிப்பிராயப்படுகிறார்கள். இந்த வாக்குரிமையைச் சரியாகப் பயன்படுத்தும் முதிர்ச்சி உங்களுக்கு இருக்கிறதா?

ஜெயஸ்ரீ: இப்போது கல்லூரி தேர்தலில் கூட நாங்கள் நேரடியாக வோட்டுப் போடுவதில்லை. வகுப்புப் பிரதிநிதி ஒருவர்தான் எங்களுக்காக வோட்டுப் போடுவார். பிரசாரமெல்லாம் கிடையாது. இந்தச் சூழலில் தான் திடீரென்று வோட்டுரிமை வழங்குவதாகப் பேசுகிறார்கள்.

கல்கி: மாணவர் தேர்தல் என்பது ஜனநாயகப் பணிகளுக்கு உங்களைத் தயார்படுத்துவதற்காக ஏற்படுத்தப்பட்டதல்லவா?

சஞ்சய்: ஆனால் அப்படி இருப்பதில்லையே! மாணவர் தலைவர்கள் அரசியல்வாதிகளின் கைப்பாவைகளாகி விடுகிறார்கள். மேலும் அவர்கள் பரீட்சைகள் பற்றிக் கவலைப்படுவதில்லை — அரசியலில் அவர்களுக்கு எதிர்காலம் உறுதி செய்யப்பட்டு விடுவதனால்... மாணவர் தலைவருக்குக் கல்லூரியில் ஒரு 'சீட்' வேறு ஒதுக்கப்படுகிறது! அந்த சீட்டிற்கு அவர் யாரை வேண்டுமானாலும் சிபாரிசு செய்யலாம்! இதெல்லாம் ஜனநாயகமா என்ன...?

கல்கி: பதினெட்டில் வாக்குரிமை பெறுவதன் மூலம் மாணவர்களின் பிரச்னைகள் தீரும் என்று நினைக்கிறீர்களா?

பூங்கோதை: வாக்குரிமை வழங்குவதன் மூலம் அப் பிரச்னைகளைத் தீர்க்க முடியுமென்று தோன்றவில்லை. சற்று யோசித்துப் பாருங்கள். மாணவர்களுக்குத் தகுதி அடிப்படையில் கல்லூரிகளில் இடம் கிடையாது— சிபாரிசு வேண்டும், இல்லாவிட்டால் நன்கொடை. போதாக்குறைக்கு இட ஒதுக்கீடு. பட்டம் பெற்று வந்தால் வேலை இல்லை. எங்களுக்கு வோட்டுரிமை தருவதால் இப் பிரச்னைகள் எப்படித் தீரும்...?

சஞ்சய்: எங்கள் பிரச்னைகள் தீர வேண்டுமானால், கல்லூரி, பல்கலைக்கழக நிர்வாகத்தில் எங்களுக்குப் பிரதிநிதித்துவம் தரப்பட வேண்டும்.

ஹரி: அண்ணா பல்கலைக்கழக சிண்டிகேட்டில் பெரிய தொழிலதிபர்களும் கல்வியாளர்களும் இருக்கிறார்கள், ஆனால் மாணவர் பிரதிநிதி கிடையாது.

சஞ்சய்: சென்னைப் பல்கலைக் கழகத்திலும் அப்படித்தான்... எங்களுக்குப் பிரதிநிதித்துவம் கொடுத்தால் நாங்கள் எங்கள் பிரச்னைகளை எடுத்துச் சொல்ல முடியும்.

கல்கி: உங்களுக்குப் பிரதிநிதித்துவம் தரப்பட்டாலும் கல்வி அமைச்சரகம்தானே கொள்கை அளவிலான முடிவுகளை எடுக்க வேண்டும். அப்போது அரசியல் தலையீடு இருக்கத்தானே செய்யும்...?

ஹரி: அது தேவையேயில்லை. அமெரிக்காவில் எவ்வளவோ பிரமாதமான பல்கலைக் கழகங்கள் உள்ளன. அவ்வளவும் தனியார் கட்டுப்பாட்டில்தான் இருக்கின்றன. எனவே அரசியல்வாதிகளின் தலையீடும் மாணவர்களின் அரசியல் ஈடுபாடும் குறைந்தால்தான் கல்வித்தரம் உயரும். அதனால் சஞ்சய் சொன்னது போல் படிக்க வந்த எங்களை அந்த முதன்மை நோக்கம் நிறைவேறும் வரை அரசியலில் ஈடுபடுத்தாதீர்கள். இந்த வாக்குரிமை இப்போது வேண்டாம். எங்கள் கல்வி நிலையை முதலில் உயர்த்துங்கள். எங்கள் பிரச்னைகளைத் தீர்த்துக் கொள்வதில் எங்களுக்கு முதலில் உரிமை கொடுங்கள் என்றுதான் இவ்வுரையாடலை முடிக்கத் தோன்றுகிறது. அரசாங்கத்தின் கல்வி தொடர்பான கொள்கைகளும் பல்கலைக் கழகத்தின் கல்வித் திட்டங்களும் கல்லூரி நிர்வாக முறைகளும் மாணவர்களைக் கலந்தாலோசித்து உருவாக்கப்பட வேண்டும். வாக்குரிமை பெறுவது ஒரு கௌரவமாக இருக்கலாம். ஆனால் அரசியல்வாதிகளின் தரம் உயராத வரை சமூகத்தை மேம்படுத்த முடியாது. 'மாறாக நான் பதவிக்கு வந்தால் மாணவர்களுக்குக் கூப்பி அடிக்கும் உரிமையைச் சட்டபூர்வமாக வழங்குவேன்' என்று இனி அரசியல்வாதிகள் வாக்குறுதி கொடுக்க ஆரம்பித்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை!

தொகுப்பு: **டி. கே. ராமசாமி.**

வண்ணப்படம்: **கே. வி. ஆனந்த்**

**(வண்ணப்படத்தில்: சஞ்சய், அனிதா)**

---

"இப்ப வந்திட்டுப் போறவரு உங்க சொந்தக்காரரா இல்ல, நண்பரா? ரெண்டு நாளைக்கு ஒருமுறை வர்றாரே?"

"சொந்தமுமில்லே, நண்பருமில்லே. டெலிபோன் ரிப்பேர் பார்க்கிறவர்!"

— பொடுசி.



வரும் நாட்கள் ஏதேனும் ஒன்றில் யூரேகா ஃபோர்ப்ஸ் சேல்ஸ்மேன் உங்கள் வீட்டுக் கதவைத் தட்டி, அடையாளச் சீட்டுடன் தன்னை அறிமுகப்படுத்திக் கொள்வார்.

அவர் பேச்சில்நன்னம்பிக்கை தொனிக்கும் – இதில் வியப்பேதும் இல்லை. ஏனெனில், இவர் இந்தியாவிலே இது போன்ற நிறுவனங்களில் மிகப் பெரியதும் வெற்றி வாகை சூடியதுமாகிய விற்பனை நிறுவனத்தின் அங்கத்தினர் ஆவார். இந்நிறுவனம் விற்பனைக்குப் பின் நம்பகமான சேவை புரியும் பின்னணி கொண்டது.

தூசு, தும்பிலே அசுத்தம், அசுத்தமான நீர் மற்றும் வீட்டு வேலைகளில் உதவியின்மை போன்ற இன்றைய பிரச்சினைகளை சமாளிப்பதற்கென நவீன வீட்டுபயோக சாதனங்களை அவர் உங்களுக்கு அறிமுகப்படுத்துவார்.

செயல்முறை விளக்கத்திற்கு இவரிடம் இரண்டு இணையற்ற தயாரிப்புகள் உள்ளன: யூரோக்ளீன் – அனைத்துபயோக சுத்தம் செய்யும் சாதனம். இது வேக்யூம் க்ளீனரை விட சிறந்தது. மற்றும் அக்வாகார்ட் – நீர் பைப்பிலேயே பொருத்தக் கூடிய வாட்டர் ஃபில்டர் கம் ப்யூரிஃபயர்.

யூரோக்ளீன் – உங்கள் வீட்டில் உள்ள தூசு மற்றும் சிறு துரும்புகளையும்கூட சிரமமின்றி எளிதில் அகற்றுகிறது. கண்ணிற்கு புலப்படாத தூசுகள்கூட அகன்று விடும். அக்வாகார்ட் – ஒரு ஸ்விட்சை இயக்கி, குழாயைத் திறந்தால், கிருமிகள் அற்ற பாதுகாப்பான, சுத்தமான குடிநீரை உங்கள் குழாயிலேயே நீங்கள் பெறலாம்.

உங்கள் குடும்பத்திற்கு, சுத்தம் மற்றும் சுகாதாரத்திற்கான நவீன முறைகளை இத்தயாரிப்புகள் எவ்விதம் வழங்குகின்றன என்பதை யூரேகா ஃபோர்ப்ஸ் சேல்ஸ்மேன் உங்கள் வீட்டிலேயே உபயோகித்து விளக்குவார். அதன் மூலம் உங்களைச் சுற்றிலும் சுத்தமும் சுகாதாரமும் நிறைந்த உலகம் உருவாகும்.

அவர் உங்கள் வீட்டிற்கு வரும் நாள் வரை நீங்கள் காத்திருக்க வேண்டாம். விரைவில் வருகை புரிய கீழ்க்காணும் யூரேகா ஃபோர்ப்ஸ் அலுவலகங்கள் ஏதேனும் ஒன்றில் தொடர்பு கொள்ளுங்கள், அல்லது இம் முகவரிக்கு எழுதுங்கள்: யூரேகா ஃபோர்ப்ஸ், பி.ஓ. பாக்ஸ் 936, ஜி.பி.ஓ. பம்பாய்-400 001.

---

# யூரோக்ளீன்

அனைத்துபயோக சுத்தம் செய்யும் சாதனம் – வேக்யூம் க்ளீனரை விட சிறந்தது.

---

# அக்வாகார்ட்

நீர் பைப்பில் பொருத்தக் கூடிய வாட்டர் ஃபில்டர் கம் ப்யூரிஃபயர்.

---



## யூரேகா ஃபோர்ப்ஸ் லிமிடெட்

நவீன முறை சுத்தம் சுகாதாரத்தின் முன்னோடிகள்.

---

யூரோக்ளீன் சேல்ஸ் மற்றும் சர்வீஸ் சென்டர்களின் முகவரிகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. நட்சத்திரக் குறியிட்ட இடங்களில் அக்வா கார்டும் கிடைக்கிறது.

**யூரேகா ஃபோர்ப்ஸ் லிமிடெட்**

தலைமை அலுவலகம் ஃபோர்ப்ஸ் பில்டிங், 4வது மாடி, சரன்ஜித்ராய் மார்க், ஃபோர்ட், பம்பாய் 400 001 ஃபோன் : 2044695/3286

**பம்பாய்**

* 1. க்ரிஸ்டல், 4வது மாடி, 79, டாக்டர் அன்னிபெஸண்ட் ரோடு, வொர்லி. ஃபோன் : 4935175/7126/4661/62/63
* 2. D-16, காமர்ஸ் செண்டர், தார்தேவ் மெயின் ரோடு, ஃபோன் : 4949183/6184.
* 3. B-3, ஹேப்பி ஹோம் அபார்ட்மெண்ட்ஸ், 1வது மாடி, 66, வுடவுஸ் ரோடு, கொலாபா. ஃபோன் : 217458/217430.
* 4. 71, நாகர், 2வது மாடி, ஹெக்ஸ்ட் ஃபாக்டரி எதிரே, எல்.பி.எஸ். மார்க், முலுண்ட் (மேற்கு) ஃபோன் : 5601082/5619148.

**கல்கத்தா**

* 5. 7, சக்ரபேரியா ரோடு, (தெற்கு). ஃபோன் : 477954/5402
* 6. 177, ராஜா திரேந்திரா சாலை, தேஷ்பந்து பார்க் எதிரே, ஷ்யாம் பஜார் ஃபோன் : 555624.

**டில்லி**

* 7. 402, அர்ச்சனா கமர்ஷியல் காம்ப்ளெக்ஸ், கிரேட்டர் கைலாஷ் பார்ட் 1, ஃபோன் : 6416143.
* 8. 12/4, ஆஸஃப் அலி ரோடு, வித்தல் பில்டிங். ஃபோன் : 278068/270523.
* 9. M/37, கிரேட்டர் கைலாஷ் II மார்க்கெட். ஃபோன் : 6449727/6433827.
* 10. 203/204 ஜமுனா ஹவுஸ், பதம் சிங் ரோடு, கரோல் பாக். ஃபோன் : 5717722/5442.

**சென்னை**

* 11. 733, அண்ணா சாலை, 2வது மாடி. ஃபோன் : 869846/861413.
* 12. சுஷ்ட் கோண்ட் சேம்பர்ஸ், 2வது மாடி, 92/ஜி.என் செட்டி ரோடு, தி. நகர். ஃபோன் : 446610/17.

**பெங்களூர்**

* 13. ஃப்ராஜூ கமர்ஷியல் காம்ப்ளெக்ஸ், 68, ஜெ.சி. ரோடு, ஃபோன் : 224453/225673.
* 14. 4306, ஷா பாயிண்ட்-4, 3வது மாடி, 45, பாலஸ் ரோடு, ஃபோன் : 27746.

**கோயம்புத்தூர்**

* 15. எண். 61, மேற்கு, டி.வி. சாமி ரோடு, ஆர்.எஸ். புரம். ஃபோன் : 23180.

**ஹைதராபாத்**

* 16. 403, கலா மேன்ஷன், சரோஜினி தேவி ரோடு, செகந்திராபாத். ஃபோன் : 844128.

**மதுரை**

* 17. 290, கே. கே. நகர் ஃபோன் : 45326.

**சேலம்**

* 18. 19-C, சாரதா காலேஜ் ரோடு

**திருச்சிராப்பள்ளி**

* 19. காவேரி, 79/80, ராஜா காலனி, சங்கம் ஹோட்டல் கண்டோன்மெண்ட் பின்புறம்.

**திருவனந்தபுரம்**

* 20. T.C. எண். 42/68, பங்கஜா பவன், கலியங்குளம் தெரு, மணக்காடு, ஃபோன் : 79670.

[illegible]-tm

# தொடுவான மனிதர்கள்




என்றைக்குமில்லாமல் அன்று மிகவும் சந்தோஷமாக இருந்தான் கார்த்திகேயன். உற்சாகமாகக் காணப்பட்டான். தன் அறைக்குள் நுழைந்த உடனேயே ராதிகாவைக் கூப்பிட்டான். உள்ளே வந்தவளைப் பார்த்து அழகாகச் சிரித்தான்.

"நேற்று டெலிபோன்ல நான் சொல்றதாகச் சொன்ன சந்தோஷ சமாசாரம் என்னன்னு நீ கேட்கலையே ராதிகா....?"— மிகவும் இயல்பான புன்னகையுடனும், இயற்கையான எதிர்பார்ப்புடனும் கேட்டான்.

அந்த சந்தோஷத்தையும், உற்சாகத்தையும் பிரதிபலிக்காமல் ராதிகாவின் குரல் ஒருவித இயந்திரத்தனத்தில் வெளிப்பட்டது.

"சொல்லுங்க சார்...."

"இப்படி நின்னுண்டே கேட்டுட்டுப் போற விஷயமில்லை. உட்காரு. சொல்றேன்..."

"பரவாயில்ல சார்.... சொல்லுங்க..."

"ம்ஹூம். உட்கார்ந்தால்தான் சொல்லுவேன்." — முதல் முறையாக அவன் தன் கம்பீரத்தை விட்டு விட்டு ஒரு குழந்தை மாதிரி அடம் பிடிக்க, வேறு வழியின்றி ராதிகா உட்கார்ந்து கொண்டாள். அவன் சட்டென்று ஆரம்பித்தான். சொல்கிற போதே முகம் பிரகாசமாயிற்று. கண்கள் பளிச்சிட்டன. குரலில் ஆர்வம் மிகுந்தது.

"யு நோ... ஸ்டேட்ஸ்லேர்ந்து என் அப்பாவும், அம்மாவும் வந்திருக்காங்க..."

"ஓ..."

"வந்து கிட்டத்தட்ட பத்து நாளாச்சு ராதிகா...."

"அப்படியா....?"

"ஆமாம். வந்த உடனே ரெண்டு நாள் எஸ்டேட் விஷயமா கொடைக்கானல் போயிருந்தாங்க. திரும்பி வந்ததும் நான் நம்ம விஷயத்தைச் சொன்னேன். ரொம்ப நாளா என் கிட்டே கல்யாணத்தைப் பற்றிக் கேட்டுக் கேட்டுச் சலிச்சுப் போனவங்களுக்கு நான் சொன்னது ரொம்ப சந்தோஷமாயிருந்தது. உடனே உன்னைப் பார்க்கணும்னு சொன்னாங்க. நான் தான் நேற்று பெங்களூர், முந்தாநாள் கோயம்புத்தூர்னு அலைஞ்சுண்டிருந்தேனே.... இன்னிக்கு நைட் ப்ளைட்ல அவங்க திரும்பிப் போயிடறதனால சாயந்திரம் உன்னைக் கூட்டிண்டு வர்றதா சொல்லிட்டு வந்திருக்கேன். வர்றியா ராதிகா...?"

அதைக் கேட்டு அவளது முகத்தில் சந்தோஷமோ, மலர்ச்சியோ ஏற்படாததைக் கவனித்தவன் சட்டென்று தன் உற்சாகத்தில் பாதியை இழந்தான்.

"என்ன ராதிகா... பதிலே இல்லை...?"

"இல்லை... நீங்களா சொல்லி முடிவு பண்ணிட்டு வந்து என்னைக் கேட்கறீங்களேன்னு யோசிச்சேன்...."

அதில் அவனது முகம் வாடிற்று. அவள் சொல்வது நிஜம் என்று தோன்றிற்று. அவளது அபிப்பிராயத்தைக் கேட்காமல் தானாக முடிவு செய்தது தவறுதான் என்று உணர்ந்தான். அது மாதிரியான அதீத உரிமைகளை எடுத்துக் கொள்ளாதவன் ஆதலால் 'எப்படிச் செய்தோம் இந்தத் தப்பை....?' என்று யோசித்து வருத்தப்படுகிற குரலில் தொடர்ந்தான்.

"ஐயாம் ஸாரி ராதிகா... வெரி ஸாரி... உன் அனுமதியில்லாமல் நான் அப்படிச் சொல்லி விட்டு வந்தது தப்புதான். அந்த மாதிரியான ஒரு சுதந்திரத்தை எடுத்துக் கொண்டிருக்கக் கூடாதுதான். ஆனால் தங்களின் வருங்கால மருமகளைப் பார்க்க என் அப்பாவும், அம்மாவும் காட்டுகிற அதே ஆர்வம் உனக்கும் இருக்கும்னு நினைச்சுத்தான் அப்படிச் சொன்னேன். இதுல உனக்கு ஏதாவது அப்ஜெக்ஷனோ, ரிஸர்வேஷனோ இருக்குமானால் வேணாம். நான் அவர்களுக்கு போன் பண்ணி உன்னால் இன்னிக்கு வர முடியலைன்னு தெரியப்படுத்திடறேன்....

ராதிகா தயங்கி, பின் மெதுவாக, ஆனால் அழுத்தமாகச் சொன்னாள்:

"இன்னிக்கு வர முடியலைன்றதைவிட என்னிக்குமே வர முடியாத நிலையில் இருக்கிறதையும் தெரியப்படுத்திட்டீங்கன்னா இன்னும் நல்லது...."

நிஜமாகவே பதறிப் போனான் அவன். ஒரு வினாடி அதிர்ந்து கூடப் போனான்.

இந்துமதி

பின்னர் மெல்லச் சமாளித்துக் கொண்டு கேட்டான். "ஏன் ராதிகா....? ஏன் இப்படிச் சொல்றே....? அன்னிக்கு உன்கிட்ட நான் இதைப் பற்றிப் பேசினதிலிருந்து — அதற்கப்புறம் நாம் பழகின விதத்திலிருந்து உனக்கு இதுல பூரண சம்மதம்னு நான் நினைச்சுண்டிருக்கேன்...."

"அன்னிக்கு உங்கபேச்சைக்கேட்டப்புறம் நானும் இதைப் பற்றி யோசிச்சது வாஸ்தவம் தான். இன்ஃபாக்ட் பாட்டிக்குக் கூட இதுல முழு சம்மதம்..."

"பின்னே... திடீர்னு ஏன் இப்படிச் சொல்றே...?"

அதற்குப் பின்னர் குமுறிக் கொண்டு வெளிப்பட்டாள் அவள். துக்கம் கொப்பளித்துக் கொண்டு வர, மனத்தில் இருந்ததையெல்லாம் கொட்டினாள். ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் தன் நெஞ்சில் விழுந்த அடிகளைச் சுட்டிக் காட்டினாள். ஐயாயிரம் ரூபாய் பணத்திற்கு அவன் சொன்ன 'தேவைப்பட்டால் என்னைக் கேளு, உதவி செய்யறேன்....' சிவா பள்ளிக் கூடத்தில் மயக்கம் போட்டு விழுந்ததைக் கேட்டுச் சிறிதுகூட அக்கறையின்றி 'வேணும்னா நீ லீவு போட்டுட்டுப் போ....' என்றது என ஒவ்வொன்றாய் எதையும் மறைக்காமல் வெளிப்படுத்தினாள். அது போன்ற சந்தர்பங்களில் ராம்குமார் நடந்து கொண்ட விதம், ஓடி வந்து செய்த உதவிகள், தன்னை அரவணைத்து நடத்திச் சென்ற பாதுகாப்பு..... எல்லாவற்றையும் சொல்லி, விவரித்துக் கடைசியில் அழுகைக்கிடையில் மெல்லப் பேசினாள்.

".... யு ஆர் நாட் லைக் ராம்குமார்.... அவரை மாதிரி நீங்க எனக்கு ஆதரவு தர மாட்டீங்க. சரிஇற தோளா உதவி செய்ய முன்



வர மாட்டீங்க. நானே முயற்சி பண்ணிப் பார்த்துமுடியலைன்னாக்கடைசியில்உங்ககிட்ட ஓடி வரச் சொல்வீங்க. இதுவா அன்பு...? இதுவா காதல்....? இதுவா மனைவியாகப் போறவ கிட்ட காட்ற பரிவு....? நோ! உங்களைப் பொறுத்த வரை இதுதான் அன்புன்னா.... காதல்னா..... அது எனக்குத் தேவையில்லை. அந்த மாதிரி தொடுவான மனிதனா, தள்ளி நிற்கிற பிரியம் எனக்கு வேணாம். எனக்கு வேண்டியதெல்லாம் ராம்குமார் காட்டின அதே நிஜமான பிரியம். என்னைச் சாரவைத்து, நான் சரிகிற தோளா இருந்து தாங்கிண்ட பிரியம். என் கஷ்டங்களையெல்லாம் தன்னுடையதா ஏற்றுக் கொண்டு செய்த உதவி. என்னை எது செய்யவும் விடாமல் போற்றின பாதுகாப்பு.... அதெல்லாம் உங்க கிட்ட இல்லை. இல்லாத ஒண்ணை எதிர் பார்த்தது என் தப்பு. நீங்க ராம்குமார் மாதிரி இருக்கவும் முடியாது. ஆகவும் முடியாது. அதனால் நாம் பாஸ் செகரெட்டரியாகவே தொடர்றதுதான் உங்களுக்கும் நல்லது, எனக்கும் நல்லது....''

மூச்சு விடாமல் அவள் பேசி முடிக்கும் வரை இடையில் குறுக்கிடாமல் அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்தான் கார்த்திகேயன். பின்னர் சில வினாடிகள் அவள் முகத்தை ஊடுருவுகிற விதமாகப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு ஓர் ஆழமான பெருமூச்சுடன் கேட்டான்.

''வெல்... நீ சொல்ல வேண்டியதையெல்லாம் சொல்லிட்டே....மனசுல எதையும் வச்சுக்காமல் இப்படிப் பேசினது எனக்குச் சந்தோஷம்தான். இனிமேல் நான் பேசலாம்னு நினைக்கிறேன். பேசட்டுமா...? கொஞ்சம் பொறுமையா கேட்டுக்கறியா...?''

அவளிடமிருந்து அதற்கு எந்தவித பதிலும் வராமல் போக, அவன் தொடர்ந்து அழுத்தமான குரலில் ஆரம்பித்தான்.

''எஸ்! நீ சொன்ன மாதிரி நான் ராம்குமார் இல்லை. ராம்குமாரா மாறணும்னு நினைக்கிறவனும் இல்லை. நான் ராம்குமார் மாதிரி நடக்கணும்னு நினைக்கிறதோ — என்னை அவன் கூடத் தராசுல நிறுத்தி எடை போடறதோ தப்புன்றது என் அபிப்பிராயம். எப்பவும் நான் நானாகவே இருக்கிறவன். அதே மாதிரி நீ — நீயாகத்தான் இருக்கணும்னு எதிர் பார்க்கிறேனே தவிர வேற யார் மாதிரியாவது இருந்திருக்கக் கூடாதான்னு ஏக்கப்படற பைத்தியக்காரத்தனமெல்லாம் எனக்குக் கிடையாது. நீ — நீயாக இருக்கணும்னு நான் சொல்றது — உன் சுய கால்ல நிற்கணும், எப்பவும் யார் தயவையும் எதிர் பார்க்கக் கூடாதுன்றது தான். காதலிக்கிறவனானாலும் சரி — கல்யாணம் பண்ணிண்டவனானாலும் சரி. யாரையும் சாராமல் — நீ ஆசைப்படற மாதிரி இன்னொரு தோளில் சரியாமல் — உன் கால்களை அழுத்தி ஊன்றித் தைரியமானவளா நிற்கணும். உன் பிரச்னைகளை நீயே சமாளிக்கக் கூடியவளா இருக்கணும். ஒரு ஆண் துணையை எதிர் பார்க்கிற காரணத்துனால தான் பெண் தன் கௌரவத்தைத் தானே குறைச்சுக்கறா... தாழ்ந்தவளாக மதிப்பிடப் படறா.... அலட்சியமாக நடத்தப்படறா..... அப்படியில்லாமல் எந்த ஒரு ஆண்துணையையும் சாராமல் தன் வேலைகளைத் தானே செய்துக்கமுடியும்னு ஒவ்வொரு பெண்ணும் செய்து காட்டணும். நான் தேடுவது ஒரு துணை — ஆத்மார்த்தமான துணைதானே தவிர சரிவதற்கான சாய்மானமில்லைன்னு தைரியமா முன் வந்து நிரூபிச்சுக் காட்டுவீங்கன்னா.... இந்த தேசத்துப் பெண்களோட தலையெழுத்து மாறும். நீங்க நினைக்கிற சமத்துவம், சுதந்திரம் எல்லாமே கிடைக்கும்....

சிறிது இடைவெளி விட்டு, தனக்குள் யோசித்தவனாக மீண்டும் அவனே பேச்சைத் தொடர்ந்தான்.

''.... நீ உன் சுய பலத்துல — சுய சிந்தனை மிகுந்தவளா — என் உதவியின்றிப் பிரச்னைகளைத் தைரியமா சமாளிக்கத் தெரிஞ்சவளா இருக்கணும் என்கிற எண்ணத்துனாலதான் நான் அப்படி நடந்துண்டேன். அது உன் மனசை நோகடிச்சிருந்தால் ஐயம் ஸாரி. ஆனால் அதுக்காக நான் ராம்குமார் மாதிரி நடந்துக்கவோ, இல்லே மாறுவேன்னோ சொல்ல வரலை. அது என்னால் முடியாது. உன்னை உன் சுயபலத்தில் நிற்க விடாமல் தன் தோளைத் தந்து சரிய வச்சுண்டது ராம்குமார் உன் மீது வச்ச அபரிமிதமான ஒரு பிரியத்தால் இருக்கலாம். அல்லது உன் குடும்ப நிலைமையை உணர்ந்த அனுதாபமும் கலந்ததாக இருக்கலாம். எதுவானாலும் — இனிமேலும் அந்தச் சார்ந்திருத்தல் தொடரக் கூடாது... நான் உன் மீது கொண்டிருக்கிற பிரியம் ஒரு குறுகிய வட்டத்திற்குள் அடைபட்டதில்லை. மிக மிக விரிவானது. இந்த சாதாரண ஓடி வந்து உதவி செய்கிற எல்லைகளைத் தாண்டினது என்பதைப் பரிபூரணமாக உன்னால் உணர முடியுமானால் — நீ என்னை ஏற்றுக் கொள்ளலாம்.... உன் முடிவு எதுவானாலும் நான் ஏற்றுக்கக் காத்துண்டிருக்கேன். இன்னிக்கு ராத்திரி என் அம்மா, அப்பாவுக்குப் பத்து மணிக்குத்தான் ப்ளைட். எட்டு மணிக்கெல்லாம் அவங்க

''தலைவர் போன எலெக்ஷனில் முப்பது ஆயிரம் வோட்டு வாங்கி ஜெயிச்சாராமே?''

''ஆமாம்! முப்பது ஆயிரம் வோட்டையும் 'வாங்கி'த்தான் ஜெயிச்சார்!''

— இளை. அ. கதிர்வேல்.






அமைதியாய் அழகாய் தூங்கிட...டார்ட்டாய்ஸ் கொசுவர்த்திச் சுருள்.




கொசுக்களை ஒரேயடியாக வீழ்த்துகிறது...டார்ட்டாய்ஸ் கொசுவர்த்திச் சுருள்

# டார்டாய்ஸ்

## கொசு வர்த்திச் சுருள்





தயாரிப்பாளர்:
பாம்பே கெமிகல்ஸ் ப்ரைவேட் லிமிடெட்
:.போர்ட், பம்பாய்-400 023. :.போன்: 273831

தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரிக்கு விநியோகஸ்தர்கள்: சாந்திலால் பிரதர்ஸ், 7 காசி செட்டி லேன், 2 வது மாடி, சென்னை 600 079. :.போன்: 569986/560414/569826.

ஏர் போர்ட்டுக்குக் கிளம்பிடுவாங்க. உன் பதில் சம்மதம்னால் அதுக்கு முன்னால் நீ என் வீட்டுக்கு வா. எட்டு மணிக்குள்ள வரலைன்னால் உனக்கு இதுல விருப்ப மில்லைன்னு புரிஞ்சுண்டு அம்மா அப்பா கிட்டேயும் சொல்லி அனுப்பிடறேன். ஓ. கே....? எதுவானாலும் நீ இன்னிக்கு எடுக்கிற முடிவு திடமானதா தீர்மான மானதா இருக்கணும். உன் மனசுக்குத் திருப் தியா, நிம்மதி தரக்கூடியதா, சந்தோஷ மானதா இருக்கணும். இந்த ஆபீஸ் சூழ் நிலைல யோசிக்க முடியலைன்னால் வீட் டுக்குப் போய்க் கூட யோசி.... நான் இப்போ வீட்டுக்குக் கிளம்பறேன். உன் பதிலுக்காக எட்டுமணிவரைகாத்துண்டு இருப்பேன்றதை மட்டும் மறந்துடாதே... வரேன்...''..

அவன் போனதும் சிறிது நேரம் அப்படி யே பிரமை பிடித்த மாதிரி உட்கார்ந்திருந் தாள் ராதிகா. மனசு அதிகம் குழம்பித் தவிக்க, எழுந்து வீட்டிற்குப் போனாள். பாட்டியை உட்காரவைத்து அவளிடம் எல்லாவற்றையும் சொல்லி அவளது மடியில் முகத்தைப் புதைத்துக் கொண்டு அழ ஆரம்பித்தாள். பாட்டி அவளது போராட்டம் புரிந்தவளாகத் தலையைக் கோதி விட்ட வாறு நிதானமாகப் பேசத் துவங்கினாள்.

''நான் இப்போ எது சொன்னாலும் கேட்டுண்டு அதும்படி செய்வியா....?''

''செ...ய்...ய...றேன் பாட்டி....''

''உன் நல்லதுக்குத்தான் எதையும் சொல் வேன்னு நம்பறியா...?''

''நம்பறேன்....''

''முதல்ல எழுந்து உட்கார்ந்துக்கோ....''

பாட்டியின் மடியிலிருந்து தலையை நிமிர்த்தி எழுந்து உட்கார்ந்தாள்.

பாட்டி தீவிரமாகப் பேச ஆரம்பித்தாள்.

''உங்க சேர்மன் சொன்னது ஒரு வார்த்தை விடாம சரின்னு படறது எனக்கு. பொம் மனாட்டிகளை ஆளணும்னு நினைக்காத, அடிமைப் படுத்த ஆசைப்படாத தொலை நோக்கு பார்வை உள்ள விசாலமான அன்பாத் தெரியறது. அன்பினால் கூட யாரையும் கட்டிப் போடக்கூடாது... சுதந்திரமா செயல் பட விடணும், செயல்படத் தெரியணும் என்கிற பண்பட்ட பரந்த மனசு பிடிபடறது. அவரை நீ தொடுவான மனுஷன்னு சொன் னது கூட ஒரு விதத்துல பார்த்தா எனக்குச் சரின்னே படறது. எப்படின்னு கேட்டியானா மனசால நினைச்சுக் கூடப் பார்க்க முடியாத உயரத்துல — சாதாரண மனுஷா அண் ணாந்து பார்க்கிற தகுதி கூட இல்லாத ஞானத்துல இருக்கார்ன்ற காரணத்துனால அவர் தொடுவான மனுஷனேதான்! இந்த மாதிரியான உசந்த அன்பு கிடைக்கிறது ரொம்பரொம்பக்கஷ்டம்ராதிகா. இவ்வளவு ஞானமா யோசிக்கிறதுக்கே ஒரு தகுதி வேணும். அதையெல்லாம் உன்கிட்ட அர்ப்பணம்செய்ய இந்தமாதிரி ஒரு மனுஷன் காத்துண்டிருக்கான்னா யாராவது இப்படி படுத்து. அழுதுண்டு. யோசிச்சுண்டிருப் பாளோ....?

''பாட்டி இப்ப என்னை என்ன பண்ணச் சொல்றேள்....?''

''பரபரன்னு எழுந்து மூஞ்சியலம்பிண்டு, பளிச்சுனு நெற்றிக்கு இட்டுண்டு, நல்ல புடைவையைக் கட்டிண்டு, ஸ்வாமிக்கு நமஸ் காரம் பண்ணிட்டு, ஓடிப் போய் உன் மாம னார் மாமியாரை நிற்க வச்சு நமஸ்காரம் பண்ணணும்னு சொல்றேன்...''

ஆட்டோவில் ராதிகா கார்த்திகேயன் வீட்டை அடைந்தபோது மணி எட்டு பத்து. வாசலில் கூர்க்கா, அவர்கள் விமான நிலையத்திற்குப் புறப்பட்டுப் போய் விட்டதைத் தெரிவிக்க, இவள் 'டொமஸ்டிக் ஏர்ப்போர்ட்தானே?' என்று கேட்டு ஊர் ஜிதம் செய்து கொண்டு, மீண்டும் ஆட்டோ வில் ஏறிப்பதறினாள். இதயத் துடிப்பு அதி வேகத்தில் இயங்கத் தன்னைச் சீக்கிரமாக விமான நிலையம் கொண்டு போய் விடச் சொல்லிக்கெஞ்சினாள்.

அடுத்த அரைமணி நேரத்தில் உள்நாட்டு விமான நிலையத்தில் ஆட்டோ நிற்க, பேரம் பேசாமல் ஆட்டோக்காரனுக்குப் பணத்தைத் தந்து விட்டு வேகம், பரபரப்பு, உணர்ச்சிக் கொந்தளிப்பு எல்லாம்சேர்ந்து தொண்டைக் குழியை அழுத்தி, பீரிட்டெழுந்த துக்கம் வெளி வராமல் தடை போட — உள்ளுக்குள் ளேயே சன்னமான விசும்பல்களாகப் புறப்பட்டு அடங்க-நுழைவாயிலின் கண் ணாடிக் கதவை நெருங்கி எட்டிப் பார்த் தாள்.

டிக்கெட்டைச் சரி பார்க்கிற வரிசையில் பெற்றோருடன்நின்றுகொண்டிருந்தகார்த்தி கேயன் அவளை கவனித்து விட்டான். மறு வினாடி முகமும், மனமும் பளிச்சிட வீணை யை மீட்டின விரல்களின் வேகமாக உள்ளுக் குள் ஒரு சந்தோஷம் ஆர்ப்பரித்துப் புறப்பட, தன்னை அடக்கிக் கொள்ள இயலாதவனாக ஓடி வந்து ராதிகாவின் எதிரில் மூச்சிரைக்க நின்றான்.

அங்கு வார்த்தைகள் மௌனமாகிப் பார் வைகள் பேசத்தொடங்கின. கலங்கித்தவித்த கண்கள் மெல்லக் கலந்தன. மனங்கள் ஒன்றையொன்று இறுகத் தழுவின. தோளில் முகம் புதைந்தது. கைகள் முதுகில் பின்னிக் கொண்டன.

'நான் வந்துட்டேன் கார்த்திக். உங்களை முழுசாப் புரிஞ்சுண்ட — சுயகால்ல பலமா ஊன்றி நிற்கிற ராதிகாவா — உங்களுடைய ராதிகாவா திரும்பி வந்திருக்கேன்....'

'நீ வருவேன்றது எனக்குத் தெரியும். என் உள் மனசு சொல்லிண்டே இருந்தது. பார் வை உன்னை எதிர் பார்த்து வாசல்லியே காத்துண்டிருந்தது. ஐ லவ் யூ ராதிகா... லவ் யு ஸோ மச்...'

தூரத்திலிருந்து அவர்கள் இருவரையும் கவனித்த அவனது பெற்றோர்கள், அவள் தான் ராதிகா என்பதைப் புரிந்து கொண்டு தங்களின் சந்தோஷத்தை ஆனந்தக் கண்ணீ ராய்க் கரையவிட்டார்கள்.

(முற்றும்)

இதுக்கு கே. 1: செய்வதைத் திருத்தச் செய்வது என்னோட துணைத்தான், என்னைக் காட்டிக் கொடுத்தது...
இதுக்கு கே. 2: அதெப்படி....?

# அறிவு ஆளட்டும்; உணர்ச்சிகள் அல்ல..!



• புகைப்படம்: ஜார்ஜ் ஃப்ரான்ஸிஸ்.

• 'ஐய்யோ பாவம்' என்று பதவியைக் கொடுப்பதா...?

**அ**ன்னை இந்திரா காந்தி என்று அழைக்கிறார்கள் இப்போது. அன்னை என்ற அடைமொழி கொடுத்து அவரைப் பாசமிக்க, பரிவு கொண்ட, எல்லாவற்றையும் மன்னிக்கும் தாயாக, நம்மை எண்ணுமாறு தூண்டுகின்றனர் காங்கிரஸ்காரர்கள். உண்மையில் இந்திரா காந்தி அப்படி இல்லை. எமர்ஜென்சியில் சர்வாதிகாரியாகவும், காமராஜரை ஒதுக்கியதில் நன்றி பாராட்டாத் தன்மையையும் பார்க்கிறோம். அன்னை என்ற சொல்லின் மூலம் உணர்ச்சியைக் கொட்டி நம்ப வைக்க முயற்சி செய்கிறார்கள். விஷயங்களைப் பாரபட்சமில்லாமல் அறிவுபூர்வமாக அணுகுகிற முறைகளைக் கற்றுக் கொடுத்தால்தான் தனி மனித வாழ்வு வளம் பெறும்; நாடும் முன்னேறும்.

பெருந்தலைவர் என்று அழைப்பதன் மூலமும், மூன்று அடைமொழி போட்டு ஒரு தலைவனை விளம்பரப்படுத்திக் கொள்வதன் மூலமும் "இவன் சாமானியனல்லன், மாமனிதன். சூப்பர்மேன். விஸ்வரூபம் எடுத்து இந்த உலகைக் காக்கப் பிறந்திருக்கிறான்!" என்கிற மலைப்பை ஊட்டுகின்றனர். பயபக்தியை எழுப்புகின்றனர். இதன் விளைவாக உடன் பிறப்புக்களும், ரத்தத் துளிகளும் தங்களுக்குத் தாங்களே தீவைத்துக் கொள்கின்றனர். உணர்ச்சியைத் தூண்டி விட்டிருக்கிறார்களே ஒழிய அறிவை அல்ல. பெயர் என்னவோ பகுத்தறிவுப் பாசறை!

இன்றைய அரசியல் தலைவர்கள் நம்மிடையே பரிதாப — அனுதாப — பச்சாதாப உணர்வையும் உண்டு பண்ணப் பார்க்கின்றனர். ஒரு தலைவர் கூறுகிறார்: "என்னைச் சிறையில் அடைத்தார்களே! பூச்சி பல்லி பூரானுடன் வாழ்ந்தேனே! நான் தண்டவாளத்தில் தலை வைத்தேனே! கேட்பாரில்லையா! எனக்குப் பத்தாண்டு தண்டனை கொடுத்து விட்டார்களே! இது நியாயமா?" என்று நமது பச்சாதாப உணர்வைக் கிளறி விடுகிறார். நமது வீட்டுக்கு வரும் பிச்சைக்காரன் கூட "அம்மா தாயே! பத்து நாளாய்ப் பட்டினி!" என்று நமது பரிதாபத்தைத் தூண்டிச் சோறு வ்ாங்கி உண்ண முயல்கிறான். உணவு யாசிப்பது வேறு! பதவிப் பிச்சை கேட்பது வேறு! பச்சாதாபப் பட்டுப் பதவியைக் கொடுக்க முடியுமா?

மற்றொரு தலைவி, "என் கணவன் இறந்து விட்டான். நான் கைம்பெண். என்னை முதுகில் வேறு குத்தி விட்டார்கள். இல்லாவிட்டால் பிதுரார்ஜித சொத்து நேரே எனக்குக் கிடைத்திருக்கும்!" என்று புலம்புகிறார். இன்னுமொரு தலைவி, "நான்தான் அவருடன் வாழ்ந்தவள். உடன் கட்டை ஏறுவதாக இருந்தேன்!" என்று பேசுகிறார். ஒரு பெண்மணிக்கு அல்லது ஆடவனுக்குக் கஷ்டகாலம் என்றோ, 'ஐயோ பாவம்,' என்றோ பதவியைக் கொடுப்பதா?

நமது அரசியல்வாதிகள் இதை எல்லாம் மறந்து விட்டுத் தகுதிகளை வைத்தும், முன் அனுபவங்களைக் காட்டியும், திறமைகளைச் சொல்லியும் பதவி கேட்க வேண்டும். மாறாக, பொது மக்களது அறிவை மழுங்கச் செய்து உணர்ச்சியைத் தூண்டிப் பதவியைக் கேட்கிறார்கள்!

**கட**ந்து போன ஆட்சியின் விளைவுகளைத்தான் தமிழ்நாடு இன்று அனுபவித்துக் கொண்டிருக்கிறது. ஆனால் இதைத் தெளிவாக, ஆணித்தரமாக எடுத்து முன் வைத்தால் இறந்து போன தலைவர் மீது

—டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி

பச்சாதாபம் கொண்டுள்ள, அபிமானம் வைத்துள்ள மக்களின் வோட்டுக்களை இழந்து விடுவோமோ என்கிற பயம். இவர்களாகவே இப்படி உருவேற்றிக் கொண்ட பய உணர்ச்சியால் இந்தத் தலைவர்கள் ஆட்டுவிக்கப்பட்டு, வாய்மூடி மௌனியாக இருக்கின்றார்கள். காங்கிரஸ்காரர்களும் சரி, தி. மு. க. காரர்களும் சரி, இப்படி மூடி மறைப்பதா அரசியல்? ''குப்பையைப் பாய்க் கடியில் தள்ளு! யாரும் பார்க்க மாட்டார்கள்!'' என்பதா அணுகுமுறை?

ஆட்சிக்கு வரத் துடிக்கும் ஒரு கட்சித் தலைவரைப் பார்த்து, 'நீங்கள் முன்பு பதவியில் இருந்தபோது ஊழல் செய்தீரே' என்று கேட்டுப் பாருங்கள்; அவர் உடனே, 'ஏன், அவர் ஊழல் செய்யவில்லையா? இவர் ஊழல் செய்யவில்லையா?' என்று மாற்றுக் கட்சித் தலைவர்களைப் பற்றிச் சொல்வார். அதில் உண்மை இருக்கிறது என்றாலும், ஒருவன் செய்த ஊழல் இன்னொருவனும் ஊழலில்உழல்வதைநியாயப்படுத்திவிடாது. கோபப்படுபவன் கேள்விக்குப் பதில் சொல்ல மாட்டான்; மற்றொருவனைத் தான் தாக்குவான். இப்படித்தான் உணர்ச்சிகளால் ஆளப்படுகிறார்கள் நமது அரசியல் வாதிகள்.

கோபம் வரும்போது என்னாகிறது? வன்முறைக்குத்தூண்டுகிறது. இதன்விளைவாகத் தான் சட்டசபையில் அடிதடி; அரசியல் வாதி மீது 'ஆசிட்' ஊற்றுதல் எல்லாம். இவர்கள்தான், 'மாற்றான் தோட்டத்து மல்லிகைக்கும் மணமுண்டு' என்று சொன்னவரின் வாரிசுகள்!

இவர்கள் என்ன செய்தார்கள்? முதலில் ஓர் இனத்தின் மீது வெறுப்பை வளர்த்தார்கள். இந்திக்கெதிராக வெறுப்பை வளர்த்தார்கள். அப்புறம் மொழிக்கெதிராக வெறுப்பை வளர்த்தார்கள். கடைசியில் ஒருவரையொருவர் அதே வெறுப்பில் அடித்துக் கொண்டிருக்கிறார்கள்.

வெறுப்பு நாளடைவில், வெறியாகவும், வன்முறையாகவும்மாறிவிடுகிறது. உணர்ச்சிகளின் கட்டுப்பாடின்மையைத்தான் சட்டசபையிலிருந்து 'ஆசிட்' வரை காண்கிறோம்.

சொந்த வாழ்விலும், பொது வாழ்விலும், பிற ஜனநாயகங்களில் தலைவர்கள் உணர்ச்சி பூர்வமாகச் செயல்படுவதைக் குறைத்து அறிவுபூர்வமாகச் செயல்படுகிறார்கள். அதனால் மக்களையும் உணர்ச்சி வசப்படாமல் சிந்திக்கச் செய்கிறார்கள். இதன் மூலம்தான் மனித உரிமைகள் — சமத்துவம், சுதந்திரம் போன்ற அடிப்படை உரிமைகள் — மக்கள் வாழ்வை அந்நாடுகளில் உயர்த்தின.

நமது நாட்டின் இன்றைய அரசியல் தலைவர்களோ நம் உணர்ச்சிகளையே தூண்டிவிட்டு நம்மை மீண்டும் கற்கால மனித நிலைக்கு அழைத்துப் போய்க் கொண்டிருக்கிறார்கள்! காரணம், பதவி ஆசை என்ற குரங்காட்டி இவர்களை ஆட்டி வைத்துக் கொண்டிருப்பதுதான். அதற்குக் கட்டுப்பட்டு இவர்கள் குட்டிக்கரணம் போடவும் கோலைத் தாண்டவும் தயாராகி விடுகிறார்கள்.

இவர்களிடமிருந்தும்—இத்தகைய மனோபாவங்களிலிருந்தும் நாம் விடுபடும் நாள் தான் உண்மையான விடுதலை நாள்.

---

- கேரளாவிலுள்ள இரிஞ்ஞாலகுடா என்ற ஊரில் மட்டும்தான் பரதனுக்குக் கோவில் இருக்கிறது. அங்கு கத்தரிக்காயை நைவேத்தியம் செய்கிறார்கள்!

- இந்தியாவில் 2,17,000 டன் தேங்காய் எண்ணெய் உற்பத்தி செய்யப்படுகிறது. இதில் சரிபாதி கேரளாவிலிருந்து கிடைக்கிறது!

- கேரளாவில் ஆலப்புழை மாவட்டத்தில் படகிலேயே தபால் நிலையம் இயங்கி வருகிறது. அது ஆற்றின் ஓரமாகக் கரையோடு சென்று ஆங்காங்கே நிறுத்தப்பட்டு கார்டு, கவர், ஸ்டாம்புகள் போன்றவைகளை விற்பனை செய்வதுடன், தபால்களையும் பட்டுவாடா செய்கிறது. தபால் பெட்டி ஒன்றும் அதில் உள்ளது. படகை ஓட்டுவதும் மற்ற பணிகளைச் செய்வதும் அதில் வரும் போஸ்ட் மாஸ்டரே!

— [illegible]



''நம்ம தொகுதியில யாரோ ஒருத்தர், தான் வருங்கால எம். எல். ஏன்னு இப்பவே லஞ்சம், நன்கொடை எல்லாம் வாங்கிட்டு இருக்கிறாராமே... அது உண்மையா...?''

— கடுவை கோபால்சாமி.



* சொத்து விவரம்



நியாயம் அல்ல.







* கோட்டையும் குடிசையும்

* எஸ். சையது ஆரிஃப், இடையகோட்டை.

? 'எதிர்காலத்தில் ஆட்சிக்கு வருகிறவர் யாராயிருந்தாலும் அவர்களுக்குத் திரைப் படத் துறையோடு தொடர்பு இருக்கக் கூடாது' என்று பி. எஸ். கூறியிருக்கி றாரே?

! லஞ்ச — ஊழலோடு தொடர்பிருக்கக் கூடாது என்று சொன்னால் யாருமே மிஞ்ச மாட்டார்கள் என்பதால் இப்படிச் சொன் னாரோ, என்னவோ!

* பி. எல். பரமசிவம், மதுரை..

? வயதில் பெரியவர்கள் கூட ஜெயலலிதா காலைத் தொட்டு வணங்குகிறார்களாமே?

! பதவி ஆசை காரணமாகச் சிலர் முது கெலும்பைக் கழற்றிக் கோட் ஸ்டாண்டில் மாட்டி விட்டு வந்து புழுவாக நெளிவதைக் கண்டு நாம் அருவருக்கும் அதே சமயம் அந்த வணக்கத்தை ஏற்றுக் கொள்கிற ஆணவத் தைப் பார்த்தும் நாம் முகம் சுளிக்கத்தான் வேண்டியிருக்கிறது.

* வெள்ளக்கால் இரா. கந்தையா, ஆலடி யூர்.

? மௌலானா அபுல் கலாம் ஆஸாத் தமது நூலின் சில பக்கங்களைப் பல ஆண்டு களுக்குப் பின் வெளியிட வேண்டும் என்று எழுதி வைத்துவிட்டுப் போய்விட்டார். இப் போது வெளியிடப்படும் நூலில் நேரு, பட்டேல் ஆகியோர் மீது அவர் பல குற்றச் சாட்டுக்களைச் சுமத்தியிருப்பது தெரிய வரு கிறது. இவற்றுக்குப் பதில் கூற நேருவும் பட்டேலும் இன்று இல்லை. இந்த நிலையில் நூலை வெளியிட்டிருக்க வேண்டுமா?

! நூலை இன்று வெளியிட்டதைக் குற்றம் என்று கூற முடியாது. காரணம் அதற்கான உரிமைகளை ஆஸாத் வழங்கிச் சென்றிருக் கிறார். ஆனால் ஆஸாத் இப்படிச் செய் தது நியாயம் என்று எனக்குத் தோன்ற வில்லை. கருத்து மாறுபாடுகளை உள்ளடக்கி முழு நூலையும் அவர் முன்பே துணிச்சலு டன் வெளியிட்டிருந்தால் பட்டேலும் நேரு வும் தங்கள் தரப்பு வாதத்தையும் மக்கள் முன் வைத்திருக்க முடியும். அல்லது ஆஸாத் தமது இந்த அபிப்பிராயங்கள் தம்முட னேயே மறைந்து போக விட்டிருக்க வேண் டும். இப்போது பத்திரிகைகளில் பரபரப் பான செய்தி அடிபட்டதுடன் சரி; சம்பந்தப் பட்ட எந்தத் தலைவர் மீதும் நமக்கு மதிப்பு அதிகரிக்கவில்லை.

* ஸ்ரீ மனோபாரதி, பாண்டிச்சேரி.

? கருணாநிதி, வீரமணி இரு பகுத்தறிவு வாதிகளின் காகிதப் போர் எதைக் காட்டு கிறது?

! ஒருவர் மீது ஒருவர் காகித அம்பு வீசிக் கொள்வதைப் பார்த்து ஏமாந்து விடாதீர் கள். தேர்தல் முடியட்டும்; பன்னீர் தெளித்துக் கொள்வார்கள்.

* எஸ். ராஜா, சென்னை.

? 'தனியார் மருத்துவ, இன்ஜினியரிங் கல் லூரிகளை அரசுடைமையாக்குவோம்' என்று ஜெயலலிதா பேசியிருப்பது குறித்து...?

! இவருடைய தெய்வம் எம். ஜி. ஆர். செய்த ஏற்பாடுதான் இந்தத் தனியார் தொழில் கல்லூரிகள். கப்பம் கட்டிப் பெறப் பட்ட அனுமதிகள். துரதிர்ஷ்டவசமாக அனுமதி பெற்றவர்கள் இன்று ஜானகிக்கும் வீரப்பனுக்கும் வேண்டியவர்களாக இருப்ப தால் ஜெ இப்படிப் பேசுகிறார். அவர்கள் நிறம் மாறினால் இவர் குரலும் மாறும்.

* இரா. காந்தி, திருக்கடையூர்.

? 'செஞ்சிக் கோட்டையில் ஏறியவனெல் லாம் தேசிங்கு ராஜனல்ல; குடிசைக்குள் நுழைந்தவனெல்லாம் எம். ஜி. ஆர். அல்ல' என்று ஆர். எம். வீ. கூறுவது பற்றி...?

! புனித ஜார்ஜ் கோட்டைக்குள் நுழைந் தவனெல்லாம் புனிதனல்ல என்றும் அவர் சேர்த்துக் கொண்டிருக்கலாம்.

# வி.பி. சிங் சொத்து விவரங்களை அறிவித்திருக்கிறாரே?

* தி. கமலவாசன், அயன்புரம்.

? விஷத்தை விடக் கொடியது?

! ஜாதி, மதப் பிரிவினைகளை அரசும் அரசியல்வாதிகளும் வளர்ப்பது.

* சாஸ்திரி வெங்கடேஷ், கோழிக்கோடு.

? 'இந்திய மாணவர்கள்தான் உலகிலேயே மிகவும் புத்திசாலிகள்' என்று ராஜீவ் கூறுவது...?

! வோட்டுரிமை பெறும் வயதைப் பதினெட்டாகக் குறைக்கப் போவது நிச்சயம் என்பதை உணர்த்துகிறது.

* கிரிஜா, தண்டையார்பேட்டை.

? டீ. வி. நிலையத்துக்கு ஒரு அட்வைஸ்?

! அட்வைஸ் என்ன, 'தீபாவளியன்றாவது விடுமுறை எடுத்துக் கொள்ளுங்கள் — பிளீஸ்' என்று கெஞ்சவே தயார். — தாங்கலை!

* பாக்கியமுத்து, திருச்சி — 20.

? 'குஜராத்தில் பால் விலையை விடத் தமிழகத்தில் பால் விலை குறைவுதான்' என்று பால் விலையை ஏற்றிய பின் ஆளுனரின் ஆலோசகர் கூறியது பற்றி...?

! இடது கன்னத்தை நாம் காட்டாத போதே இடது கன்னத்திலும் கொடுக்கப்படும் அடி.

* குரு. செல்வ சிரோன்மணி, இலஞ்சி.

? மாலத்தீவில் நமது படை ஆற்றிய பணி குறித்து?

! சபாஷ் — ராஜீவுக்கும் சேர்த்துத்தான்.

* ஏ. டி. பூவராதன், விருத்தாசலம்.

? வி. பி. சிங். தமது சொத்து விவரங்களை அறிவித்திருப்பது பற்றி...?

! அதைவிட முக்கியம் ராஜீவின் ஸ்விஸ் வங்கி சொத்து விவரத்தை வி. பி. சிங் அறிவித்ததுதான். 'நிரூபியுங்கள்' என்று கேட்ட இ. காங்கிரஸினருக்குப் பதில் கூறுமுகமாக ஆவண நகல்களையும் வெளியிட்டுள்ளார். இனி ராஜீவ்தான் குறிப்பிட்ட நெம்பரும் லோட்டஸ் என்ற பெயரும் தமக்குத் தொடர்பில்லாதவை என்று நிரூபிக்க வேண்டும். உண்மையிலேயே தொடர்பில்லையெனில் ஸ்விஸ் அரசு, ஸ்விஸ் வங்கி ஆகியன இதனைத் தனித்தனி அறிக்கைகள் மூலம் எளிதாக நிரூபிக்கலாம்.

* கே. வி. நாதன், நெய்வேலி.

? ஜெ. அணி ஆதரவாளர் நடராஜன் அரசுப் பணியிலிருந்து ராஜினாமா செய்து விட்டாரே?

! என்றைக்கோ வெளியேற்றப்பட்டிருக்க வேண்டியவர். அரசியல் திருப்பங்கள் எப்படியிருக்குமோ, யார் யாருடன் கூட்டுச் சேர்வார்களோ என்பதால் இத்தனை காலம் அரசு அவர் மீது நடவடிக்கை எடுக்காமலிருந்திருக்கிறது. 'சீச்சீ! இந்தப் பழம் புளிக்கும்!' என்பது போல் அவர் ராஜினாமாவுக்குக் கூறியுள்ள காரணம் பரிகாசச் சிரிப்புக்கு இடமளிக்கிறது.

எம். ஜே. மார்ட்டின், அனந்தநாடார்குடி.

? டிக்கென்ஸ், ஷா முதலியவர்களை 'the late' என்று குறிப்பிடுவதில்லையே, 'அமரர் கல்கி' என்று கூறுவது முறையாகுமா?

! late என்றால் சமீபத்தில் காலமானவர் என்று அர்த்தம்; அமரர் என்றால் மரணமற்றவர் என்று பொருள்.

* அ. கிருஷ்ணமூர்த்தி, நரிப்பாளையம்.

? மத்தியில் தேசிய முன்னணியும் மாநிலத்தில் தி. மு. க. வும் ஆட்சியைப் பிடிப்பதால் இந்தியாவில் பாலும் தேனுமா பெருக்கெடுத்து ஓடப் போகிறது?

! எந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தாலும் பாம்பும் தேளும் தறிகெட்டு ஓடாமல் இருந்தாலே போதும் என்ற நிலைக்கு மக்கள் வந்துவிட்டார்கள்.

* ரூ. 20 பரிசு பெறுபவர்:

வெள்ளக்கால் இரா. கந்தையா,
ஆலடியூர், — 627 421.
அம்பா சமுத்திரம் (வழி).



நீங்கள் கேட்டவை

— தராசு





# இது எங்கள் நீதி

எஸ். ஏ. சந்திரசேகர் என்றால் கோர்ட் சீன், கொலை, ரத்தம், சட்டத்தைக் கையில் எடுத்தல் என்று ஒரு மளிகை லிஸ்ட் இருக்கும்... அவை அத்தனையும் இதில் உண்டு.

தன் சொந்த வாழ்க்கையில் பாதிக்கப் பட்ட ஒரு வக்கீல், ஒரு கான்ஸ்டபிள், ஒரு வாத்தியார் – மூவரும் தங்களுக்கு நேர்ந்த கொடுமைகள் எளிய மக்களுக்கு நேரக் கூடாது என்று முடிவு செய்து, சாட்சியை மட்டுமே கேட்கும் நீதிமன்றத்தை அலட்சியப்படுத்தி, இவர்களாகவே கொடியவர்களுக்குத் தண்டனை வழங்கு கின்றார்கள். ராம்கி – நிழல்கள் ரவி – ராஜா.

ஜோடி இல்லாமல் ராதிகா, செட்டி நாடு பாஷை அனாயாசமாகப் பேசி வெற்றிலை துப்புகிறார். ஆப்பக்கடை வைத்துத் தற்கால அரசியலை எஸ். எஸ். சந்திரன், செந்திலுடன் சேர்ந்து கொண்டு சாடுகிறார். கலைஞரின் பிரசார வசனங்களுக்குக் கண்டிப்பாகக் கைதட்டல்கள் கிடைக்கும்.

ராம்கி – வாணி விஸ்வநாத், ரவி – சித்ரா – வருகிற காட்சிகள் இளமையா னவை. இனிமையானவை.

ராதாரவி தன் அப்பாவின் குரலில் பேசுகிறார். கேப் கடுவதைப் போல டப். டப் என்று சுட்டு விடுகிறார். படத்தில் இவர் மட்டும் செய்யும் கொலைகள் மூன்று!

டாக்டருக்குப் படிக்க வேண்டும் என்று கனவு காணும் பையன் – டைரக்டரின் மகனாம். நல்ல எதிர்காலம் இருக்கிறது. 'புத்திசாலி ராஜா' பாடலுக்கு நன்றாகவே ஆடுகிறான். ரசிக்கும்படி யான பாடலும் அதுவே.

மலையாள பகவதியாய் வேஷம் போட்டுக் கொண்டு போய், செய்த ஊழல் சம்பந்தப்பட்ட ஃபைல்கள் வாங்கும் காட்சி – அபத்த சிகரம். பறிகொடுத்த வில்லன்கள் அந்த ஃபைல் களைப் பற்றி அப்புறம் கவலைப் படுவதாகவே தெரியவில்லை. இதே போல லாஜிக்கைச் சுருட்டிப் பாக்கெட் டுக்குள் வைத்துக் கொண்டு பல காட்சி களை அமைத்திருக்கிறார்கள்.

பின்குறிப்பு:

ஒரு தமிழ்ப்படம் தயாரிக்க, மீடியம் பட்ஜெட் என்றால் கிட்டத்தட்ட நாற்பது லட்சம் செலவாகிறது என்று சொல் கிறார்கள்! அவ்வளவு செலவு செய்து.........?

— ஜெயமன்மதன்

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை – 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 31543, 4 34 157: ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 145.
ஆண்டுச் சந்தா – உள்நாடு: ரூ. 104/–; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/–; விமானத் தபால் ரூ. 680/–.
அரையாண்டுச் சந்தா – உள்நாடு: ரூ. 52/–; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/–; விமானத் தபால் ரூ. 340/–.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka




## ஜண்டு பாம்
## ஜலதோஷம், தலைவலி மற்றும் நோவுகளை நொடியில் நீக்குகிறது.

வேலைகளுக்கு இடைஞ்சலும் ஏற்படாது. தலைவலியில் இருந்து துரிதமான விடுதலையும் கிடைக்கிறது. எனவேதான் தேவை ஜண்டு பாம். தலைவலி நீங்கலாக, ஜலதோஷம், இடுப்புவலி, மூட்டுவலி, தசைப் பிடிப்பு மற்றும் சுளுக்கு வலிகளில் இருந்தும் குணம் அளிக்கிறது. தவிரவும், மற்ற பாம்களோடு ஒப்பிடும்போது ஜண்டு பாம் கூடுதல் வீரியம் கொண்டது. நிறமற்றது. எனவே கறை படியுமோ என்ற பயமில்லை. பிசுபிசுப்பற்றது. அதனால் வீட்டிலோ வெளியிலோ உபயோகிக்கலாம். நறுமணமும் கொண்டது. ஜண்டு பாமை கொஞ்சமாக உபயோகித்தால் போதும். அதனால் சிக்கனமானது. மிருதுவான சருமத்துக்கும் இதமானது. ஆகவேதான் தாய்மார்கள் தங்கள் குடும்பத்தினருக்கு ஜண்டு பாமையே தடவ விரும்புகிறார்கள்.

சீசாவின் மேல் இருக்கும் சிகப்பு சீலைப் பார்த்து வாங்குங்கள்.

5, 10 மற்றும் 30 கிராம்களில் கிடைக்கிறது




**ஜண்டு பாம்** வலிகளை நீக்கும் பாம்

ULKA-Z-1-88 TAM